# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KALKI • 15.11.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

கேட்காதீங்க... கேட்காதீங்க...
கேட்டுக்கிட்டே... இருக்காதீங்க..!



எஃப்.எம். ஸ்பெஷல்

# Prosperity

Each project a classic example of dedicated architecture and engineering. Each home a standing ovation to your dreams and aspirations. Each sq.ft a testimony to world class quality and meticulous care. With the pioneers in building housing projects, expect nothing less.



## Sri Kaladara

Luxury Apartment
Commercial/Resi.Project
9/12, Alexandria Road,
Cantonment, Trichy-1

2 BHK 1349 Sq.Ft - 1543 Sq.Ft , 3 BHK 1612 Sq.Ft



## Sri Guha

2 BHK Elegant Apartment

24/2,Railway Station Road,
Srirangam, Trichy- 6

2 BHK 1018 Sq.ft. - 1256 Sq.ft.



## shri JANANI garden

2 & 3 BHK Affordable Flats
5/41,Pannaiyar Chokkalingam Salai,
Bikshandarkoil Agraharam,
Trichy - 621 216.

3 Bed Room Flats of 1448 Sq.Ft 2 Nos Available.

## Shri Ganeshaya



Mangala Nagar
Bikshandar Koil
Trichy - 621 216

2 BHK 590 Sq.Ft - 733 Sq.Ft

## Sri Karthikeya



Double Bed Flats at
Door.17, Butterworth Road,
Trichirappalli - 6.

Very Near Chatram Bus Stand & Rockfort Temple.




## MANGHALAM PROMOTERS

Tel : 0431 -2433909 Fax : 2433876 Cell : 99944 42934,
24, Shri Vijaya Rengam, Royar Thope, Srirangam, Trichy - 6
manghalampromoters@gmail.com, www.manghalampromoters.com



மங்கலம் உங்களுடையதாகட்டும்

An ISO 9001:2008 Certified Company

காதலில் தோற்ற ரெண்டு பேர் சந்திச்சுக்கிட்டா என்னாகும்...? வேறென்ன கலாட்டா... மோதல்... கடைசியா காதல். இதுதான் 'கண்டேன் காதலை' படத்தின் கதையும்.

ஹிந்தியில் சூப்பர் டூப்பர் ஹிட்டடித்த 'ஜப் வீ மெட்' படத்தின் சாறுபிழிந்து தமிழ்(ஐஸ்) கட்டி கலந்து குளிரக்குளிர தந்திருக்கிறார் இயக்குநர் ஆர்.கண்ணன்.

பெர்ஃபாமென்ஸில் ஸ்கோர் பண்ணுவது தமன்னாதான். பேசுவதற்கே பிறப்பெடுத்தது மாதிரி பேசுகிறார்... பேசுகிறார்...பேசிக்கொண்டே இருக்கிறார். டிக்கெட் கொடுக்காத டி.டி.ஆரிடம் 'நான் பேசுனதுல கன்வின்ஸ் ஆயிட்டீங்க இல்ல... இல்ல இன்னும் கொஞ்சம் பேசட்டுமா?' என பேசிப் பேசியே வசீகரிக்கிறார்.

சந்தானம் - சிங்கமுத்து கூட்டணியில் காமெடி சரவெடி வசனத்துக்கு வசனம் வெடிக்கிறது. சந்தானம் ரெட்டை அர்த்தங்களைக் குறைத்துக் கொண்டால் அடுத்த கவுண்டமணியாக ரவுண்டு வரலாம்!

இத்தனை அலப்பறைக்கும் மத்தியில் உண்மையிலே பரத் இருக்கும் இடமே தெரியவில்லை. காரெக்டர் வலைக்குள் சிக்கித் திணறுகிறார்.

காணாமல் போன தமன்னாவை ஒன்பது மாதம் கழித்து அவரது குடும்பத்தினர் தேடத் தொடங்குவது ஏன்?

வீட்டை விட்டு வெளியேறும் தமன்னா காதலனுக்கு ஒரு வரித் தகவல் கூடவா சொல்லாமல் இருப்பார்?

முன்னா காதலுக்காக தமன்னா ஏங்கும் அளவுக்கு அந்தக் காதலை அழுத்தமாகக் காட்சிப் படுத்தவில்லையே... எதற்காக?

தமன்னாவோடு, பரத் வந்ததும் எதைப் பற்றியும் கேட்காமல் தமன்னா குடும்பத்தினர் கல்யாண ஏற்பாடுகளை முடுக்கி விடுவது சரிதானா?




தமன்னா ஜாலி பொண்ணா... லூசுப் பொண்ணா?

இத்தனை கேள்விகளோடு வெளியே வந்தாலும் 'மக்கா... மக்கா... கொலவை போடு...' பாடலில் வித்யாசாகரின் விரல்கள் காதுக்குள் தாளம் போடுகின்றன.

பி.ஜி.முத்தையா கேமரா கண்களை அழகாக்குகிறது.

கண்டேன் காதலை - கலர்ஃபுல் கலைடாஸ்கோப்.

– மகிமைராஜன்

# சினி சிப்ஸ்

'இந்தியே சரணம்' என்றிருந்த அசினின் 'லண்டன் ட்ரீம்ஸ்' ஊத்திக் கொண்டதில் அம்மணி அப்ஸெட்டோ அப்ஸெட். இனி இந்தி ஒத்துவரா துன்னு, மீண்டும் தமிழுக்கே தாவு கிறாராம்.

***(அக்கரைக்கு இக்கரை பச்சை)***

இயக்குநர் இமயமும், சிகரமும் இணையும் 'ரெட்டைச் சுழி' படத்தில் நட்புக்காக ஒரு பாடல் பாட இருக் கிறாராம் உலக நாயகன் கமல். கார்த்திக் ராஜாவின் அன்புத் தொல்லையும் ஒரு காரணமாம்!

***(நட்புன்னா செஞ்சுட வேண் டியதுதான்)***

ஆக்ஷன் சப்ஜெக்ட் தமக்கு அவ்வளவாக எடுபடாத தால் யதார்த்தக் கதைகளின் மீது கவனத்தைக் குவித்திருக்கிறாராம் புரட்சித் தளபதி விஷால். அடுத்த படத்தில் அடிதடி இருக்கக்கூடாது என்பது அய்யாவின் எதிர்பார்ப்பாம்.

***(அப்ப... யதார்த்த வலையில் விஷால்!)***

வடிவேலு இப்பவெல்லாம் ரொம்ப குடைச்சல் வேலுவாக இருக்கிறாராம். அவர் குடைச்சல் தாங்கமுடியா மல் சுந்தர்.சியோடு அவர் கூட்டணி போட்ட 'குரு சிஷ்யன்' படத் திலிருந்து வடிவேலுவுக்கு கல்தா வாம்.

***(ஓவராத்தான் போவுதோ வைகைப் புயலு...)***

ரீமேக் படங்கள் தனக்கு ஹிட் தேடித் தருவதால், சூப்பர் டூப்பர் ஹிட்டான மற்ற மொழி படங்களைத் தேடித் தேடிப் பார்க்கிறாராம் இயக்குநர் ஆர்.கண்ணன்.

***(கதை ஆப்டா இருந்தா அமுக் கிடுவாரோ...)***




## நியூஸ் பாய்

'கில்லி'க்குப் பிறகு எந்தப் படமும் சொல்லி அடிக்காததில் இளையதளபதியின் பாசறையில் துள்ளல் கொஞ்சம் கம்மிதான். கில்லியைப் போல ஹிட் அடிக்க லிங்குசாமியிடம் கதை கேட்கிறதாம் 'தளபதி' தரப்பு.

*(படத்தோட தலைப்பு 'பிரசார பீரங்கி'யாமே...)*

மற்ற மொழிகளிலிருந்து தமக்கு ஆஃபர் வந்தாலும், அதையெல்லாம் கண்டுகொள்ளாமல் 'தமிழ்தான் எனக்கு ஃபர்ஸ்ட் மத்ததெல்லாம் வேஸ்ட்' என்று ஸ்டேட்மெண்ட் விடுகிறாராம் விஜய்.

*(பாசக்காரப் பயலா இருக்காரே...)*

ஷாலினி தங்கை ஷாமிலி நடித்த தெலுங்குப் படம் சரியாகப் போகாததில் அம்மணி அப்செட். உடனே படிக்கப் போறேன்னு துபாய் கிளம்பிட் டார்.

*(நடிக்க வர்றேன்னு தமிழ்நாட்டுக்கு வந்தா போச்சு...)*

'மாயாண்டி குடும்பத்தார்' ஹீரோ, இயக்குநர் தருண்கோபிக்கு, நிஜத்தில் ஹீரோயின் கிடைச்சாச்சு. இந்த மாசக் கடைசியில் நிச்சயதார்த்தம். அடுத்த மாசம் டும் டும் டும்.

*('தருண்கோபி குடும்பத்தார்'னு கல்யாண வீடியோ ரிலீஸ் பண்ணுங்க.)*

# லண்டன் ட்ரீம்ஸ்!

அஜித்தின் 50வது படத்தை இயக்குவது கே.எஸ்.ரவிக்குமாராம். அதை சன் பிக்சர்ஸ் வாங்கிவிட வேண்டும் என்று தீவிர மாக வேலை செய்கிறதாம்.

*('அல்டிமேட் ஸ்டார்' - சன்லைட்ல டாலடிக் குமா...?)*







கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# ரூட்டு அடிப்பதே எங்க டியூட்டி!

"புதுசா வந்திருக்கிற பங்காளி, துலுக்கம்பட்டிக்காரரு. துலுக்கம்பட்டி எங்கேயிருக்குன்னா வையம்பட்டி பக்கத்துல. வையம்பட்டி எங்கேயிருக்குன்னா துலுக்கம்பட்டி பக்கத்துல. ஹா... ஹா... பங்காளி!"

**ஹ**லோ எஃப்.எம். இதாங்க திருச்சியின் நெம்பர் ஒன். 106.4 எஃப்.எம்- ரேடியோவுக்கு இதுதான் ரைட் நெம்பர் என்பது அவர்களின் உத்தர வாதம். இளைஞர் படை, ஹலோ எஃப்.எம்.முக்குள் புகுந்து கலக்குது. அந்தக் கலக்கலில் அவர்கள் அடிக்கும் ரூட்டு, எட்டு திசைகளிலும் எதிரொலிக்குது. ஹலோ எஃப்.எம்.மின் ஒலிபரப்பு எல்லை, தற்போது அறுபது கி.மீ. சுற்றளவுக்குள் சுழன்றடிக்குது.

''போதுங்க இந்த பில்ட் அப். விட்டா அந்த மலைக் கோட்டை உசரத்துக்கு அடுக்கிட்டே இருப்பீங்க... எங்களைப் பத்தி என்ன மேட்டரை எடுத்து விடப் போறீங்க? டக்குனு அந்த மேட்டருக்கு வாங்க பங்காளி!'' தீச்சட்டி ஏந்திய த்ரிஷா

போல, சட்டுனு நமக்கு உடுக்கடித்தது இளம் மங்கையின் குரல். திரும்பிப் பார்த்தா சிம்ரன் மாதிரி, கொஞ்சம் ஸ்டைல் காட்டி, துளியூண்டு ஸ்மைல் பண்ணி நின்னுக்கிட்டிருக்கு மானஸா. அட... நம்ம மானஸா.

''இது வெறும் மானஸா இல்லீங்க. ஸ்பரிசம் மானஸா. ஹலோ எஃப்.எம்ல நைட் பதினொண்ணு டு பன்னிரண்டு இவங்களோட பீக் ஹவர். இருபது வயசு இளமையிலேருந்து அறுபது எழுபது வயசு ஆளுங்க வரைக்கும், மானஸாவோட குரலைக் கேட்டுட்டுத்தான் தலையணை யில மொகத்தைப் புதைச்சுத் தூங்குறாங் கன்னா பார்த்துக்கங்க!'' ஒரடி கேப்புல ஒத்தையாளா உள்ளே நுழைஞ்சு வெளியே வந்தார் 'கமர்கட்' ஜான் சாலமன்.

''ஸ்பரிசம்னா தொட்டுப் பார்க்க லாம்ங்க. அதே வேண்டாத ஆளைத் தொட்டுட்டா, உடம்பு புண்ணாயிடும். அது வேற! 'கமர்கட்' நல்லா கடுக்கு முடுக்குனு கடிச்சித் தின்னலாம். என் னோட 'பல்லாங்குழி' அப்படி இல்லே. சூப்பரா வெளையாடலாம். சூப்பரோ சூப்பரா வெளையாடலாம். ஜெயிக்கிற ஆளுங்களுக்கு செவ்வாய் கிரகத்துல ஆளுக்குப் பத்து ஏக்கர் நிலம் கியாரண்டி!'' என உதார் விட்டார் 'பங்காளி' ராஜா. அது என்ன 'பங்காளி?'

''இந்தியா பூரா பரவிக் கிடந்த சொத் துக்களை யாருக்குமே இல்லேன்னு சொல் லாம, எழுத்தளவுல இல்லாட்டியும் தன் சொந்த மனசளவுல பிரிச்சுத் தந்தவரு இந்தப் பங்காளி ராஜா. அதான் பாருங்க, வஞ்சனையில்லாம குண்டு தக்காளி மாதிரி பெருத்துக் கிடக்குறாரு. இந்த மானஸா இருக்கே இது நம்ம தமிழ்ப்பொண்ணு இல்லீங்கோ. பூர்வீகம் ஜெய்ப்பூர். ஒன் பர்சலேருந்து ஒத்த ரூபா வெளியே வராது. அதான் ஒல்லிப்பிச்சு உடம்புக்காரியா இருக்கு!'' என வெடி வைத்தவர் 'கமர்கட்' ஜான் சாலமன்.



✱ ராஜா ✱ ஜான் சாலமன் ✱ மானஸா

''இந்தக் 'கமர்கட்' ஜான் சாலமன், சாதாரணப் பையன் இல்லீங்கோ. மாலை நாலு மணிலேருந்து ஆறு மணி வரைக்கும் 'கமர் கட்' வித்துட்டு வர்றேன்னு, கடை வீதிக்குப் போற பையன். நகைக் கடைகள்ல உள்ளே புகுந்து எல்லார் கண்லயும் 'கமர்கட்'டைக் காட்டி மயக்கி, எல்லா நகைங்களையும் மூட்டையா அள்ளி வந்தவன். வருமான வரித்துறைக்கே தெரியாம உலக மகா கோடீஸ்வரன் ஆனவன். ஒரு தங்கச் சங்கிலி கூட இந்தப் படவா ராஸ்கல் எனக்குப் பரிசா தரலை. மொதல்ல அவனைப் புடிச்சு 'உள்ளே' தள்ளணும்!'' நல்ல தமிழில் நயமா பேசுது இந்திப் பொண்ணு மானஸா.

''என்னை 'உள்ளே' தள்ளினாலும் சரி, வெளியே அவிழ்த்து விட்டாலும் சரி. என் வசமிருக்கற 'கமர்கட்' சரக்கை அள்ளி விட்டு எல்லாரையும் என் வசப்படுத்திடுவேன். மானஸா, நீ சொன்ன தகவலைக் கேட்டு ஹலோ எஃப்.எம்.மின் முப்பதாயிரத்துக்கும் மேற்பட்ட பங்காளிகள் எனக்கு முன்ஜாமீன் கேட்டு, கோர்ட் நோக்கி பேரணியா கிளம்பிப் போய்ட்டு இருக்காங்கனு இப்பத்தான் எனக்கு ஒரு மெசேஜ் வருது. உன்னோட அலப்பறைய இத்தோட நிறுத்திக்கோ!'' எனச் சத்த மிட்டுக் கடுப்பாகிப் போனது 'கமர்கட்'.

''கமர்கட் தினசரி மாலை நாலு டு ஆறு மணி. அந்த ரெண்டு மணி நேரத்தை நாலு வெரைட்டியா பிரிச்சுக்குவேன். சினிமா, விந்தை உலகம், தலைப்புச் செய்திகள், தம்பட்டம் அப்படின்னு. நக்கல், நையாண்டி, லொள்ளு, எல்லாம் கலந்து கட்டி அடிப்பேன். வாரத்துல ஒரு நாள், ஒரு மணி நேரம் ஏதாவது ஒரு மேட்டரை எடுத்துக்கிட்டு ஹாட் டாபிக். அதுல எல்லாத்தையும் பிரிச்சு மேய்ஞ்சுடுவேன்!'' எனப் படபடக்க வைக்கிறார் ஜான் சாலமன்.



* 'பங்காளி' ராஜா

''சொல்லுங்க பங்காளி. உங்க பேரு பழனிச்சாமி. ஊரு துலுக்கம்பட்டி. இது போதும் பங்காளி. புதுசா வந்திருக்கற பங்காளி, துலுக்கம்பட்டிக்காரரு. துலுக்கம்பட்டி எங்கேயிருக்குன்னா வையம்பட்டி பக்கத்துல. வையம் பட்டி எங்கேயிருக்குனா துலுக்கம்பட்டி பக்கத்துல. ஹா...ஹா... பங்காளி! நீங்க ஆட வேண்டிய ஒரெழுத்து வார்த்தை விளையாட்டு 'தாது'. இது முன்னாடி ஒரு எழுத்தைச் சேர்த்து ஒரு வார்த்தை சொல்லுங்க!'' என்கிறார் ராஜா. எதிர்முனையிலிருந்து 'பொருந்தாது' எனப் பதில் வருகிறது. ''தப்பு பங்காளி. தப்பு. ஒரு எழுத்து தான் சேர்க்கணும். நீங்க மூணு எழுத்தைச் சேர்த்துட்டீங்க. சரியான வார்த்தை 'போதாது!' விடுங்க பங்காளி. நீங்க மட்டும் சரியாச் சொல்லியிருந்தா உங்களுக்குப் பொள்ளாச்சி பக்கத்துல முன்னூறு ஏக்கர் பரிசா தரலாம்னு...'' பங்காளி ராஜாவின் குரல் ஹலோ எஃப்.எம்மில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

**அட்டையில்: மானஸா, ஜான் சாலமன், ராஜா**

''சில ஆண்டுகளுக்கு முன்னால் வரைக்கும் இருந்த, 'ஆல் இந்தியா ரேடியோ' தவிர வேறு எதுவும் இல்லை என்ற நிலைமை மாறி, இப்போது ஏராள மான தனியார் எஃப்.எம் ரேடியோ சேனல் கள் வந்துவிட்டன. இந்தியா முழுக்க விரைவில் 300 லைசென்ஸ்கள் தரப் போகிறார்கள். சென்னையில் மட்டும் எட்டு எஃப்.எம் ரேடியோ சேனல்களின் மார்க்கெட் மதிப்பு சுமார் 60 கோடி ரூபாய்'' என்கிறார் சென்னையில் இருக்கும் ரிலை யன்ஸ் குழுமத்தின் பிக்.எஃப்.எம் இயக்குனர் பி.பி.ராமசாமி.

# அதிரவைக்கும்

*சவால்கள்?:* ''ரேடியோ விலை குறைவான ஒரு பொழுதுபோக்கு சாதனம். எனவே கோடிக்கணக்கான நேயர் கள் இருக்கிறார்கள். அகில இந்திய அளவில் தென்னிந்தியாவில்தான் ரேடியோ மூலை முடுக்குகளில் எல்லாம்கூட சென்று அடைந்திருக்கு. தென்னிந்தியாவில் சென்னை மிக அதிகமான எண்ணிக்கை யில் ரேடியோ கேட்பவர்களைக் கொண்ட நகரம். சென்னையில் உள்ள எட்டு எஃப்.எம்.களில் ஒன்று மட்டும்தான் ஆங்கிலம். மற்றவை எல்லாமே தமிழ். அதனால எஃப்.எம். மார்க்கெட்ல கடுமை யான போட்டி இருக்கு. உங்களுக்கான நேயர்கள் யாருன்னு நீங்க தீர்மானிக்கக் கணும்; அவங்களோட ரசனை என்ன என்று புரிஞ்சிக்கணும்.

ரேடியோ பத்தின விரிவான சர்வே மூலம் 19 வயசு முதல் 39 வயசு வரை உள்ளவங்கதான் மிக அதிகமா ரேடியோ கேட்கிறாங்கன்னு கண்டுபிடிச்சோம். அவங்களைக் கவர நாம் என்ன உத்தி களைக் கையாளுகிறோம்கிறதும், அதன் மூலமாக எந்த அளவுக்கு வருவாயைப் பெருக்குறோம்கிறதும்தான் இன்னைக்குப் பெரிய சவால்.''

**பாதிப்பு இல்லை:** ''நம்ம நாட்டுல இருக்கும் விளம்பர மார்க்கெட்ல ரேடி யோவின் பங்கு வெறும் ஆறு சதவிகிதம்தான். அதனால பொருளாதாரத் தேக்க நிலை ரேடியோ மார்க்கெட்டைப் பெரிசா பாதிக்கலை. ஒரு சந்தோஷமான விஷயம் என்னன்னு பார்த்தா, ரேடியோ மிகக் குறைந்த செலவுல ஆயிரக்கணக்கான மக் களை நேரடியா சென்று அடைகிற ஒரு மீடியம். அதன் வீச்சு என்னன்னு விளம்பரதாரர்களுக்கு நல்லா புரிய ஆரம் பிச்சிருக்கு. அதனால அதை நல்லா உப யோகப்படுத்தி பலன் அடையணும்னு நினைக்கிறாங்க. போன வருஷம் ரேடியோ விளம்பரத்துக்கு ஒரு லட்சம் செலவழிச்ச வங்க, இந்த வருஷம் இரண்டு லட்சம் பட்ஜெட் ஒதுக்கறாங்க.''

**ராயல்டி?:** *'யாரோட உழைப்பிலோ உருவான பாட்டுக்களை, நோகாம ஒலி பரப்பி பணம் சம்பாதிக்கறீங்களே? ராயல்டி கொடுக்கறீங்களா?'*

''இன்று ஒவ்வொரு எஃப்.எம். ஸ்டே ஷனும் செய்யும் மிகப் பெரிய செலவு, பாடல்களுக்குக் கொடுக்கும் ராயல்டிதான். ஒலிபரப்பு செய்கிற ஒவ்வொரு பாடலுக் கும் காப்பி ரைட் சட்டப்படி சம்பந்தப் பட்ட மியூசிக் கம்பெனிகளுக்கு மாதா மாதம் ராயல்டி கொடுக்கிறோம்; பாட்டுகள் தான் எங்கள் ஒலிபரப்பின் உயிர்நாடி என்பதால் அந்தச் செலவு தவிர்க்க முடியாத ஒன்று.''

**ஆர்.ஜே?:** ''அடுத்த பெரிய பிரச்னை ரேடியோ நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங் கும் ஆர்.ஜே.தான். நிகழ்ச்சித் தொகுப்

பாளர்களுக்கு நல்ல பயிற்சி கொடுத்து, தயார் பண்ணி, அவங்களைத் தக்கவைப் பது பெரும் சவாலாக இருக்கிறது. அதுவும் எஃப்.எம் சேனல்களுக்கு அதிகமாகச் செலவு வைக்கிற விஷயமாக இருக்கிறது. ஆர்.ஜே.க்கள் அடிக்கடி சேனல் மாறிக் கொண்டிருக்கிறார்கள்.''

**லொட லொட பேச்சு:** பல ஆர்.ஜே.க்கள் பாடல்களுக்கு இடையில் ரொம்ப நேரம் லொட லொடவென்று பேசி வெறுப்படிக்கிறார்களே?

''இது ஒருவிதத்தில் நியாயமான யோவுல தமிழ்ல பேசறதுதான் சரி! தமிழ் தெரியாதவங்களை எடுக்கறதில்லை; ஆனா, இன்னிக்கு பேச்சுத் தமிழ்ல நிறைய இங்கிலீஷ் கலந்திடுச்சு! ஸாரி, டீசன்ட், சென்டர், டைம், புக், ஃபோன், பேப்பர், டேபிள்னு பல இங்கிலீஷ் வார்த்தை களைத் தமிழோட கலந்து சரளமா மக்கள் பேசறாங்க! அதனால, ஆர்.ஜே.க்கள் இங்கி லீஷ் வார்த்தைகள் கலந்து பேசறது குற் றம்னு சொல்ல வேணாம்! சீரியஸா எடுத் துக்காதீங்க! கேட்டு என்ஜாய் பண்ணுங்க!''

– எஸ்.சந்திரமௌலி

# ஆர்.ஜே.க்கள்!

## BIG 92.7 FM ராமசாமி

கேள்விதான். ஆர்.ஜே.க்கள் ஒரு பாட்டுக்கும், அடுத்த பாட்டுக்கும் இடையில் 30 முதல் 45 வினாடிகளுக்கு மேல் பேசக்கூடாது என்று கறாராகச் சொல்லி இருக்கிறோம்.

ஆனால் இந்த விஷயம் ஆர்.ஜே.வுடன் ஃபோனில் பேசும் நேயர்களுக்குப் புரிய மாட்டேங்குது. ஹலோ... ஹலோன்னே சொல்லிக்கிட்டு இருப்பாங்க. அடுத்து சொல்ல வந்த விஷயத்தைச் சுருக்கமா சொல்லத் தெரியாது. வளவளன்னு அவங்க பேசும்போது, நேயரின் மனம் புண்படா மல் நாசூக்கா கட் பண்ணி, விஷயத்தையும் சொல்ல வைப்பது ஆர்.ஜே.க்களின் கையில்தான் இருக்கு.

நாங்க நேயர்கள் பேசறத நேரடியா ஒலிபரப்பாம, பதிவு செஞ்சு ரெண்டே நிமிஷத்துல நச்சுன்னு எடிட் பண்ணி ஒலிபரப்பறோம்.''

**தமிங்கிலம் தவறா?:** ''தமிழ் எஃப்.எம். ரேடி



# இலங்கை ரிப்போர்ட்

"முள்வேலி முகாம்களில் அடைக்கப்பட்டிருக்கும் லட்சக்கணக்கான தமிழ் மக்கள், மீண்டும் அவர்கள் இடத்துக்குச் செல்வதற்கு முன் 'கண்ணி வெடிகளை அகற்ற வேண்டும்" என்கிறார் ராஜபக்ஷே. இது எந்த அளவுக்கு உண்மை? கண்ணி வெடிகளை அகற்றும் குழுவில் இடம்பெறும் வாய்ப்பு பெற்று, இலங்கை சென்று வந்த கலை விமர்சகரான **வி.ஆர்.தேவிகாவைச்** சந்தித்தோம்...






## "புலிகள், ராணுவம் இரண்டு தரப்புமே கண்ணி வெடிகளைப் புதைத்து வைத்திருக்கின்றன!"

"பூனாவைச் சேர்ந்த ஒய்வுபெற்ற ராணுவ அதிகாரி மேஜர் ஜெனரல் பித்ரேவை, பல வருடங்களாக எனக்குத் தெரியும். முன்பு இலங்கைக்குச் சென்ற நமது அமைதிப் படையிலும் பணியாற்றினார். அவர் துவங்கியதுதான் ஹொரைசான் (Horizon) என்ற தன்னார்வத் தொண்டு நிறுவனம். 42 ஓய்வுபெற்ற ராணுவ அதிகாரிகள் இதில் இருக்கிறார்கள். இந்த அமைப்பு எடுத்துக்கொண்டுள்ள மிக முக்கியச் செயல் திட்டம், 'இரு நாடுகளுக்கிடையே, யுத்தம் முடிந்ததும் செய்யப்படும் 'சுத்தப்படுத்தும் பணி' (post war clean up). சண்டை நடந்த இடத்தில் உள்ள கண்ணி வெடிகளை அகற்றுவது, வெடிக்காத குண்டுகளைச் செயலிழக்கச் செய்வது... போன்ற ஆபத்தான பணிகளும் இதில் அடக்கம்.

2003ல் இலங்கையில் அம்பாரை மாவட்டத்தை, புலிகளிடமிருந்து ராணுவம் மீண்டும் கைப்பற்றிய போது, இந்த அமைப்பு அங்கு சென்று கண்ணி வெடிகளை அகற்றி ஏரியாவைச் 'சுத்தம்' செய்தது. இதன் மூலம் மீண்டும் மக்கள் அந்த இடங்களில் வாழ்க்கையைத் தொடர முடிந்தது. இலங்கையில் கடந்த மே மாதம், புலிகளோடு நடந்த உக்கிரமான கடைசி மோதல் முடிவடைந்தவுடன், உள்நாட்டிலேயே முள்வேலி முகாம்களில் அகதி



* பித்ரே

னார் சாலையில் அனுராதபுரத்தைக் கடந்தவுடன் ஏகப்பட்ட ராணுவ செக்போஸ்ட்கள்.

அது மீனவ கிராமம். புலிகள் கண்ணி வெடிகளைச் சகட்டு மேனிக்கு 'தூவி' விட்டுச் சென்றிருக்கிறார்கள். அவர்களாலேயே தயாரிக்கப்பட்ட, மற்றும் வெளிநாட்டுக் கண்ணி வெடிகள் மிகச் சக்தி வாய்ந்தவை. அதேசமயம் ராணுவம் வைத்திருக்கும் கண்ணி வெடிகள் கொஞ்சம் சக்தி குறைந்தவைதான். இரு தரப்பும் வைத்திருக்கும் கண்ணி வெடிகளை எடுத்துச் செயலிழக்கச் செய்வதுதான் வேலை. புலிகள் வைத்துள்ள கண்ணி வெடிகள், மக்கள் பயன்பாட்டில் உள்ள சாலைகள் என்றில்லாமல் வயல்களில் கூட புதைக்கப்பட்டிருக்கின்றன. மன்னாரில்

# கலங்க வைக்கும் கண்ணி வெடிகள்!

களாக உள்ள லட்சக்கணக்கான தமிழ் மக்களை, மீண்டும் அவர்கள் இடங்களில் குடியமர்த்துதலுக்கு மிக முக்கிய தடை, நிலத்தில் புதைக்கப்பட்டிருக்கும் கண்ணி வெடிகள் தான். எனவே, இவற்றை அகற்ற ஹொரரை சானுக்கு மீண்டும் அழைப்பு விடுக்கப்பட்டது. குழு உறுப்பினராக என்னையும் பித்ரே அழைத்துச் சென்றார்.

நாங்கள் சென்றது மன்னார் மாவட்டம் வான்குளம் பகுதி. கொழும்பு - தலைமன்

பெரியகுளம் ஒன்றிருக்கிறது. அதையொட்டி 1089 கண்ணி வெடிகள் வைக்கப்பட்டிருந்தன! இதுபோல் எதிர்பாராத இடங்களில் (off the track) வைக்கப்பட்டிருந்ததால் நிறைய தமிழ் மக்களும் அதனால் பாதிக்கப்பட்டு, கை கால்களை இழந்திருக்கிறார்கள்; இறந்தும் போயிருக்கிறார்கள். யானைகள் உட்பட நூற்றுக்கணக்கான கால்நடைகள் கண்ணி வெடிகளை மிதித்து இறந்து போயிருக்கின்றன. இது எங்கள் குழுவுக்கு மிகச் சவாலான வேலைதான். உள்ளூர் மக்களிடையே விசாரிப்பது, கண்ணி

* வி.ஆர்.தேவிகா



வெடிகளால் இறந்து கிடக்கும் கால் நடைகளை வைத்து கண்ணிவெடியை அடையாளம் காண்பது தவிர, மிக உஷாராக நடந்தே சென்று கண்டு பிடிப்பதே மிகச் சிரமமான காரியம். அதன்பின்தான் அவற்றைச் செயல் இழக்க வைக்கும் பணி. ஒரு வண்டியின் பெட்ரோல் டாங்கின் மூடியைப் போன்றுதான் கண்ணி வெடிகளின் மேல்புறம் இருக்கும். மண்ணோடு மண்ணாகக் கண்ணுக்குத் தெரியாமல் கிடக்கும். கவச உடைகளோடு அவற்றைச் செயலிழக்க வைக்க வேண்டும். உயிருக்கே ஆபத்தான பணி.





**"வடக்கு-கிழக்கு மாகாணங்களில் ஆயிரக்கணக்கான கண்ணி வெடிகள் புதைக்கப் பட்டிருக்கின்றன!"**

எப்போதும் குழுவுக்குப் பின்பலமாக ஒரு மருத்துவ அணி இருக்கும். என் ரத்த குரூப் கேட்டு வைத்துக் கொண்டார்கள்! கண்ணி வெடிகளைக் கண்டு பிடித்த பிறகு, அங்கு சிவப்பு வர்ணம் பூசிய குச்சியை நட்டு வைத்து விடுகிறார்கள். நடமாடுபவர்களின் எச்சரிக்கைக்காக.

இந்தப் பணி சாதாரணமல்ல; வடக்கு, கிழக்கு மாவட்டங்களில் ஆயிரக்கணக்கான கண்ணி வெடிகள் புதைக்கப்பட்டிருக்கின்றன. எங்களைப் போல மூன்று குழுக்களும், சிங்கள ராணுவமும் இந்தப் பணியில் ஈடுபட்டிருக்கின்றன. இலங்கை அரசு கண்ணி வெடிகளை மிக விரைவாக அகற்ற அழுத்தம் கொடுக்கிறது. மாவட்ட நிர்வாகம் தினசரி முன்னேற்றம் குறித்து அறிக்கை கேட்கிறது! மோதலில் அழிந்துபோன வீடுகள் புதிதாகக் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கின்றன. நெடுஞ்சாலைகளும் தெருச் சாலைகளும் புதிதாகப் போடப்பட்டிருக்கின்றன. விவசாயத்துக்காகப் புதிய பாசனக் கால்வாய்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. அத்தியாவசியப் பொருட்கள் கிடைப்பதாக மக்கள் சொன்னார்கள். தமது தேவைக்கு மேல் இலங்கை மின் உற்பத்தி செய்வதால், மின்சாரத்துக்குப் பஞ்சமில்லை. இப்போது மழைக்காலம் வந்துவிட்டது. பணிகள் தடைப்பட வாய்ப்பிருக்கிறது.

மக்களிடையே எதிர்காலத்தைப் பற்றிய பயம் இருக்கிறது. 'இந்த நாடு அமைதியாக இருக்க வேண்டுமானால் சிங்களவருக்கு இருக்கும் அதே உரிமைகளும், சலுகைகளும் தமிழர்களுக்கும் கிடைக்க வேண்டும். இதைப் புரிந்துகொண்டு ராஜபக்ஷே செயல்பட வேண்டும்' என்று ஆவேசமாகச் சொன்னார் ஓர் இளைஞர். அவர் நெஞ்சத்தில் இருக்கும் நீறு பூத்த நெருப்பைக் கண்களில் காண முடிந்தது!''

சந்திப்பு: **ப்ரியன்**

ஸ்ரீ அருணாசலேஸ்வரர் துணை



# ஸ்ரீ அருணாசலேஸ்வர கிருத்திகா மஹோத்ஸவ வேதபாராயண அன்னதான டிரஸ்ட்



ஸாக்ஷாத் பரமேஸ்வரன் ஜோதி ஸ்வரூபமாய் எந்த மலையில் இருந்து கொண்டு சகல ஜீவன்களையும் ரக்ஷிக்கின்றானோ, எந்த ஸர்வேஸ்வரனை ஸ்மரித்தாலே 'ஸ்மரணாத் அருணாசலம்' என்ற வாக்கியத்திற்கேற்ப முக்தியை ஜீவன் பெறுகின்றதோ அப்படிப்பட்ட மகா புண்யமான திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் ஜோதி ஸ்வரூபமாய் விளங்கும் ஸாக்ஷாத் பரமேஸ்வரனை சிவசொரூபமாய் விளங்குகின்ற வேதவித்துக்கள் பகவானுக்கே உகந்ததான ரிக்வேதம், யஜுர், ஸாமவேதம் பாராயணம் செய்து துதிக்கிறார்கள். **கார்த்திகை மாதம் 06-ம் தேதி (22.11.2009) ஞாயிற்றுக்கிழமை முதல் கார்த்திகை மாதம் 15-ம் தேதி (01.12.2009) வரை காலை 8.00 மணி முதல் 11.00 மணிவரையில் ஸ்ரீ அருணாசலேசுவரர் ஆலயத்திலும் மதியம் 3.30 முதல் 5.30 வரையிலும், பின்னர் மாலை 6.30 மணி முதல் 8.00 மணி வரையில் ஸ்ரீ சுந்தரேசானந்தா சபையிலும் பாராயணம் நடக்கும்.** பக்தர்கள் இந்த மாபெரும் யக்ஞத்தில் கலந்துகொண்டு எல்லாவிதத்திலும் உதவிகளைச் செய்து அருணாசல ஸ்வரூபமாக விளங்குகின்ற வேத வித்துக்களின் பரிபூரண ஆசீர்வாதத்திற்குப் பாத்திரராகும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

ஒரு நாள் சமாராதனை செலவு ரூ.3000/-

ஒரு நபர் சம்பாவனை ரூ.6000/-

M.O., D.D. அனுப்புகின்றவர்கள்

**J.ரவிச்சந்திரன்** அல்லது **A.சந்தானம்** என்ற பெயருக்கு அனுப்பலாம்.

விலாசம்: ஸ்ரீ **A. சந்தானம் அய்யர்**

பொருளாளர், வேத பாராயண கமிட்டி,

மூர்த்தி காபி ஒர்க்ஸ்

49, தேரடி வீதி, திருவண்ணாமலை - 606 601

ஃபோன்: **04175 - 222719, 253166; Cell: 9487326898**

**80G *பிரிவின் கீழ் வருமானவரி விலக்கு உண்டு***



# கல்கி



2009 நவம்பர் 15
விரோதி ஐப்பசி 29
மலர் : 68
இதழ் : 16

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## பாய்ந்து தாக்கும் பணநாயகம்!

மஹாராஷ்டிரத்திலும் கர்நாடகத்திலும் எழுந்துள்ள அரசியல் நெருக்கடிகள், சூழ்ச்சி நிரம்பிய நாடகக் காட்சிகளை ஒத்திருக்கின்றன!

மஹாராஷ்டிரத்தில், கூட்டணியாகச் சேர்ந்து மக்களிடம் வோட்டுக் கேட்டு ஜெயித்த காங்கிரஸ் - தேசியவாத காங்கிரஸ் கட்சிகள் இப்போது ஆட்சி அமைப்பதற்கு இணையத் தயாராயில்லை! மந்திரி பதவிகளுக்கும் இலாகாக்களுக்குமான பேரம், பட்டவர்த்தனமாக நடைபெற்றுக் கொண்டிருக்க, ஆட்சி அமைப்பு என்ற ஒன்று இல்லாமல் அம்மாநிலத்தின் முன்னேற்றம் பல வாரங்களாகத் தடைப்பட்டு நிற்கிறது. மக்கள் இவ்விரு கட்சிகளிடமும் வைத்த நம்பிக்கை உதாசீனப்படுத்தப்பட்டிருக்கிறது!

தேர்தலுக்கு முன்பு கூட்டணி அமைத்துக் கொண்ட கட்சிகள், எப்படியேனும் ஜெயிப்பது என்ற வேகத்துடன் களமிறங்கிவிட்டு, இன்று ஒத்துப்போக முடியாமல், ஆட்சி அமைப்பதையே ஒத்திப்போட்டு வருவது மிகவும் கண்டிக்கத்தக்கது.

இன்றைய அரசியல் தலைவர்கள் தாங்கள் மக்கள் பிரதிநிதிகள்; அவர்களது நலனுக்குப் பாடுபடவேண்டியவர்கள் என்கிற எண்ணத்துடன் ஆட்சிப் பொறுப்புக்கு வருவதில்லை. தங்கள் அந்தஸ்தை, புகழை, செல்வாக்கை வளர்த்துக் கொண்டு, தேர்தலில் செலவிட்டதைப் போல் பல மடங்கு சம்பாதிக்க வழி செய்யும் ஒரு களமாகவே அரசியலை அவர்கள் கருதுகிறார்கள். இந்தப் போக்கின் பிரதிபலிப்புத்தான் இன்றைய மஹாராஷ்டிரா அரசியல் பேரம்.

சீனா
நீ பாட்ல போட்டு கலக்கிறியே... நான் எப்புடித் தண்ணி இருக்கறது?
தலாய் லாமா
அருணாசல பிரதேசம்




கர்நாடகத்திலும் இதே காரணத்தினால்தான் இழுபறி. தமது உழைப்பாலும் பங்களிப்பாலும் கட்சியை அடிமட்டத்திலிருந்து வளர்த்தவர் யெதியூரப்பா. பெல்லாரி பகுதியில் கனிமச் சுரங்கங்களைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்துள்ள ரெட்டி சகோதரர்கள், பா.ஜ.கவின் தேர்தல் வெற்றிக்கு உதவ நிறைய நிதியளித்ததன் மூலம் செல்வாக்கு பெற்றனர். அவர்களது செல்வாக்கை ஒடுக்க முயன்ற காரணத்துக்காகவே இப்போது யெதியூரப்பாவின் பெரும்பான்மை அரசுக்கு இடர் ஏற்படுத்தியுள்ளனர் ரெட்டி சகோதரர்கள்.

தேர்தல் செலவுக்காக பணம் படைத்தவர்களிடம் கையேந்துவதும், அவர்கள் அமைச்சர் பதவியில் அமர்ந்து கட்சியையே விலைக்கு வாங்கிவிட்டதைப் போல நடந்து கொள்வதும் ஜனநாயகத்துக்கு விடுக்கப்படும் சவால்கள். கர்நாடகத்தில் மிக அதிக அளவிலான பணம் தேர்தலின்போது அள்ளி இறைக்கப்பட்டிருப்பதாக பா.ஜ.க.வின் மூத்த தலைவர் ஒருவரே ஒப்புக்கொண்டிருக்கிறார். இவ்வாறு இறைத்த பணத்தை மீண்டும் சம்பாதிக்கும் முயற்சிகளில் குழு உணர்ச்சியும் தலை தூக்குகிறபோது, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரும்பான்மை அரசாங்கமே ஆட்டம் கண்டுவிடுகிறது! இதுவும் வாக்களித்த மக்களுக்கு இழைக்கப்படுகின்ற அநீதிதான்!

பணநாயகத்தின் எல்லா அம்சங்களையும் ஆராய, உடனடியாக தேர்தல் கமிஷன் ஒரு சான்றோர் குழுவை நிறுவி, அதன் மூலம் மத்திய அரசுக்கும் நாடாளுமன்றத்துக்கும் மக்களுக்கும் விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும். பணநாயகத்தை ஒழித்துக்கட்டத் தேவையான சட்டங்களும் கடும் தண்டனைகளும் இயற்றப்பட வேண்டும். இல்லாவிட்டால், வெகு விரைவில் ஜனநாயக மரபுகள் என்னவென்பதே மறந்து போகும். பணபலம்தான் நிஜமான பலம் என்று மக்களிடையே முளைவிட்டுள்ள நம்பிக்கையே வேரூன்றிவிடும்! ●

வட்டமேஜை

✉ **க**ல்யாணம் பண்ணிக்கிட்ட பிறகு சினி ஃபீல்டை விட்டு விலகிடணும்'' என்று நடிகை ரம்பா கொண்டிருந்த குடும்பச் சிந்தனை, உண்மையிலேயே அபா 'ரம்பா!' **-வே.ந.கதிர்வேல், வேலூர் - 6** ✉ **க**ல்கி 'யூத் ஸ்பெஷல்' படித்த அந்தச் சில மணி நேரங்களில் நாங்களும் 'இளமைச் சாயம்' பூசிக்கொண்டோம். **- அயன்புரம் த.சத்தியநாராயணன்** ✉ **'யூ**த்' ஸ்பெஷலில் 'கிரேஸி' ஸ்டுடண்ட்கிட்ட ஒரு கலக்குக் கலக்கியிருக்கார். அம்மாடியோவ்...! **- ஜி.ரெஜினாபானு, பழனி** ✉ **'யூ**க் ஸ்பெஷல். எங்களையும் யூத் ஆக மாற்றிய ரஸவாதம். **-ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி** ✉ **மா**ணவர்களுக்கு அறிவுரை சொல்லும் விதமாக அமைந்திருந்தது அருள்வாக்கு. **- என். பாலகிருஷ்ணன், மதுரை**

✉ **மு**ல்லை பெரியாறு விஷயத்தை இவ்வளவு துல்லியமாக விளக்கியது கல்கி ஒன்றுதான். **- கே.ராஜகோபால், சென்னை - 24** ✉ கல்கி கடைந்தெடுத்துத் தந்த யூத் ஸ்பெஷலைப் படித்ததில் வயதானோருக்கும் இளமைச் சிலிர்ப்பு . **- இரா. கல்யாணசுந்தரம், மதுரை - 9** ✉ **கா**லத்துக்கேற்ற 'யூத்' ஸ்பெஷல். **- கோமளா ரங்கநாதன், சென்னை - 17** ✉ **யூ**த் பார்லிமெண்ட் எல்லாருமே படா பட் ஆசாமிகளா இருக்காங்களே. நம்மள மாதிரி சாதாரண ஆளுங்களே இல்லையா? **- ச.ஆ.கேசவன், மணியாச்சி** ✉ **க**ல்லூரி கண்மணிகளின் எண்ண ஓட்டத்தைப் பார்க்கும்போது, பிற்காலத்தில் நல்ல பாரதம் உருவானால் ஆச்சர்யமில்லை. **- மைக்கேல்ராஜ், சாத்தூர்** ✉ **ப**ரம்பரை விவசாயக் குடும்பத்துப் பையனுக்கு பி.எஸ்ஸி அக்ரியில் இடம் கிடைக்கவில்லை

# யூத் ரஸவாதம்

என்பது மதிப்பெண்கள் அடிப்படையில் இடம் ஏன் என்பதை யோசிக்க வைக்கிறது. **- கே.பத்மநாபன், கோவை** ✉ **ம**தன் கார்க்கியும் அவர் மனைவி நந்தினியும் சேர்ந்து உருவாக்கிய 'ஐ பாட்டி' குழந்தைப் பாடல்கள் ஆடியோ சி.டி. முயற்சி அருமை. **- ஆசீர் டேவிட், நாகர்கோயில்**

---

உடையழகு நடைபழகு - அடுத்த வாரம்...



# வேப்பமர நிழலும் வானொலி தென்றலும்

இலால்குடியில் இயங்கி வருகிறது, 'நடந்தாய் வாழி காவேரி சர்வதேச வானொலி நேயர் மன்றம்'. முப்பதுக்கும் மேற்பட்ட உறுப்பினர்கள். அவர்களில் சிலரைச் சந்தித்தோம்.

**சந்திரன் - வயது 29,** *(நேரங்காப்பாளர், தமிழ்நாடு அரசு போக்குவரத்துக் கழகம்):*

பதினைஞ்சு வருஷமா வானொலி கேட்கறேன். என்னை வானொலி கேட்கத் தூண்டியவர் எழுத்தாளர் ஆங்கரை பைரவி. அது மட்டுமில்ல; நல்ல புத்தகங்களை வாசிக்க வெச்சவரும் அவர்தான். வானொலி கேக்கறதால என்னோட பொது அறிவு உயர்ந்திருக்கு. வேரித்தாஸ் வானொலியில் மருத்துவ நேரம்னு ஒண்ணு இருக்கு. அதுக்கு ஒவ்வொரு நேயரும் அதிகபட்சமா ஒரு கேள்விதான் கேட்பாங்க. ஆனா, நான் மட்டும் ஒவ்வொரு தடவையும் அஞ்சாறு கேள்வி கேப்பேன். சலிக்காம பதில் சொல்வாங்க. அதன் மூலமா நிறைய மருத்துவக் குறிப்புகள் ஐயா மனசுல பதிவாகியிருக்கு.

**மகேந்திரன் - வயது 27,** *(இளம் விவசாயி):*

கல்யாணம்ங்கறது பொதுவா சொர்க்கத்துல நிச்சயிக்கப்படறதா பெரியவங்க சொல்வாங்க. என்னோட கல்யாணம் வானொலி வாயிலாக நிச்சயம் ஆனது. நான் ஏழாம் வகுப்பு வரைதான் படிச்சிருக்கேன். வயல் வேலைக்கு வந்துட்டேன். வேப்ப மர நிழல்லயும், வரப்பு மேட்டுலயும் எனக்குத் துணையா வந்தது வானொலிதான்.


• சந்திரன்

நிகழ்ச்சிகள்ல பங்கேற்க ஆரம்பிச்சேன். அப்ப வானொலி நேயரா எனக்கு அறிமுகம் ஆனாங்க சிவசங்கரி. நானும் கிராமம். அவங்களும் கிராமம். ஃபோன்ல பேசுவோம். கடிதத் தொடர்புல காலம் நகர்ந்தது. நட்பு காதலாகி, அது கசிந்துருகும் வேளையில் கல்யாணத்துல வந்து நின்னது. இப்ப எங்களுக்கு ஒரு வயசுக் குழந்தை இருக்கு. வாழ்க்கை இனிமையாத்தான் போய்க்கிட்டிருக்கு.

**ஆர்.திவ்யா - வயது12** *(ஏழாம் வகுப்பு மாணவி):*

தாயைப் போல புள்ளைன்னு பேசுவாங்க. என்னோட அம்மாவும் வானொலி நேயர். நானும் வானொலி நேயர். என்னோட ஏழு வயசுலேருந்து ரேடியோ கேட்டு வர்றேன். ஒரு குழந்தை பிறந்து சில மணித்துளிகள்லயே காது ரெண்டும் கேக்க ஆரம்பிச்சுடுது. அப்படி இருக்

* ஆர்.திவ்யா



கறப்ப, நான் என்னோட ஏழு வயசுல ரேடியோ கேட்கக் கூடாதா என்ன? நான் மூணாவது படிச்சப்ப ரெண்டு தடவை ரேடியோ ஸ்டேஷனுக்குப் போயிருக்கேன். மழலையர் நேரம் பகுதியில் பங்கேற்றேன். இரண்டாவது தடவை நான் பேசின நிகழ்ச்சியை, ரேடியோவுல ஒலிபரப்பினாங்க. என்னால அதைக் கேட்க முடியலை. ஏன்னா... அந்த நேரம் பார்த்து எங்க ஏரியா பூரா கரண்ட் கட். நான் பேசினதை என்னாலயே கேட்க முடியாமப் போயிடுச்சு!



* மகேந்திரன்



* கலைச்செல்வன்



* முத்துலட்சுமி

**முத்துலட்சுமி - வயது 30,** *(இல்லத்தரசி):*

இருபத்துமூணு வருஷமா வானொலி கேக்கறேன். ஹலோ எஃப்.எம்ல பல்லாங்குழி நிகழ்ச்சி-எனக்கு ரொம்பப் பிடிக்கும். ரெயின்போ பண்பலைல என்னுயிர்த் தோழியில நான் பங்கெடுத்துக்கறேன். வானொலி மூலமா நிறைய தோழிகள். இப்ப வானொலியில நவீனமா நெறைய வந்துடுச்சு. என்னதான் வந்தாலும், நான் சின்னப் புள்ளையா இருந்தப்ப ரேடியோவுல அலைவரிசை தொடங்கும் போதும், முடியும் போதும் ஒரு வித மியூசிக் ஒலிபரப்பாகும். அது கேட்க அவ்வளவு நல்லா இருக்கும். இப்ப அந்த மியூசிக் ஏனோ மிஸ்ஸிங்!

**கலைச்செல்வன் - வயது 27,** *(மளிகை அங்காடி):* கற்றலில் கேட்டலே மிக நன்று. அந்த வகையில வானொலி ஒரு அற்புதம். சின்ன வயசுலேருந்து வானொலி நேயர் நான். அந்த ஆர்வத்துல தான் நாலைஞ்சு வருஷமா வானொலி நேயர் மன்றம் நடத்தி வர்றோம். என்னோட பல்பொருள் அங்காடியில வியாபாரம் செஞ்சுக்கிட்டே வானொலி கேட்டுட்டு இருப்பேன். ரேடியோ கேக்கறதுல இது ஒரு சௌகர்யம். கைவேலை எதையும் அது இடைஞ்சல் பண்ணாது. உள்ளூர் பண்பலையோ அல்லது சர்வதேச வானொலியோ எதுவா இருந்தாலும், தினசரி என் பேரு ஒரு நேரம் ஒரு தடவை யாவது சொல்லி ஆகணும். அந்தளவுக்கு நான் முயற்சி செஞ்சுக்கிட்டே இருப்பேன். கவிப்பேரரசு வைரமுத்து ஒரு தடவை சொன்னாரு, 'வானொலி கேட்கும் நேரம், வாழ்வின் உன்னத நேரம்!'னு அது நூத்துக்கு நூறு உண்மையான வார்த்தை.

செய்திச் சித்திரம் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

ஒரு அம்பயரின் மரணச் செய்திகூட இவ்வளவுபெரிய பாதிப்பை ஏற்படுத்தும் என்பது இப்போது நிரூபணமாகியிருக்கிறது. பொதுவாக கிரிக்கெட்டில் நடுவர் களுக்கு ரசிகர்கள் அமைவது பெரும் கடினம். டிக்கி பேர்ட் தன் நுட்பமான தீர்ப்புகளால் நிறைய ரசிகர்களை உரு வாக்கியிருந்தார். ஆனால் அவரை விடவும் டேவிட் ஷெப்பர்டுக்கு நிறைய ரசிகர்கள் உண்டு.

கிறிஸ்துமஸ் தாத்தா வடிவம் கொண்டவராக டேவிட் ஷெப்பர்ட் இருந் தாலும், மைதானத்தில் அவர் ஒருபோதும் கேலிச்சித்திரமாக இருந்தது கிடையாது. கைகள் இரண்டையும் பின்னால் கட்டிக் கொண்டு கழுகுக் கண்கள் வழியாகத் துல்லியமாகத் தீர்ப்புகள் வழங்குவார். தொழில்நுட்பம் கிரிக்கெட்டுக்கு நிறைய வசதிகள் ஏற்படுத்தித் தந்தாலும் அது அவ்வப்போது நடுவர்களின் மானத்தை வாங்கிவிடுகிறது. பத்து முறை ரீப்ளே பார்த்துவிட்டு அம்பயரைக் கை நீட்டிக் குற்றம் சுமத்தும் உலகத்திலும் டேவிட்


எந்த ஒரு வீரராவது ஸ்லெட்ஜிங் செய்தால் உடனே ஆட்காட்டி விரலால் கடுமையாகக் கண்டிப்பார்.

ச.ந.கண்ணன்

# சோ ஸ்வீட் அம்பயர்

ஷெப்பர்டு கண்ணியமாகவே தம் தொழிலைச் செய்தார். அப்படியும் ஒருமுறை பாகிஸ்தானுக்கு எதிரான டெஸ்ட் போட்டி ஒன்றில் மூன்று நோ பால்களைத் தவற விட்டு விட்டார். அதற்குப் பிராயச்சித்தம் தேடும் விதமாக பல பேட்டிகளில் தன் தவறை எண்ணி வருந்தினார்.

மூன்று உலகக்கோப்பை இறுதி ஆட்டங்களில் அவர் நடுவராக இருந்திருக்கிறார். எந்த வீரரிடமும் எந்தவொரு கிரிக்கெட் வாரியத்திடமும் அவருக்குப் பிணக்குகள் இருந்தது இல்லை. அவர் மைதானத்தில் இருக்கும்போது எந்த ஒரு வீரராவது ஸ்லெட்ஜிங் செய்தால், உடனே ஆள்காட்டி விரலால் வீரரைக் கடுமையாகக் கண்டிப்பார். இறுதிவரை தம் முன்னிலையில் எந்தவொரு அசம்பாவிதமும் நடைபெறாமல் பார்த்துக்கொண்டார் ஷெப்பர்ட். அதேசமயம் அவர் வேடிக்கையும் காட்டுவார். ஸ்கோர் 111 என்று இருக்கும்போது ஒற்றைக் காலைத் தூக்கி சில நொடிகள் நிற்பார். ஷெப்பர்டின் இந்தச் செய்கை பார்வையாளர்கள் மத்தியில் பலத்த வரவேற்பு பெற்றது.

ஒருமுறை இந்தியாவுக்கு எதிரான போட்டி ஒன்றில் ஜிம்பாப்வே வீரர் டைபு, பேட்-பேட் காட்ச் கொடுத்து ஷெப்பர்டின் தீர்ப்புக்குக் காத்திராமல் வெளியேறினார். அடுத்த நாள் டைபுவைச் சந்தித்த ஷெப்பர்ட், 'யங்மேன், நல்ல காரியம் செய்தாய். பந்து பேட்டில் பட்டதை நான் கவனிக்கவேயில்லை' என்று வெளிப்படையாகப் பேசிப் பாராட்டினார். அப்போது டைபுவின் வயது 18.

பக்னர், ஹேர் என்று சண்டை, சச்சரவுகள் செய்த நடுவர்களுக்கு மத்தியில் இப்படியும் ஒருவர் வாழ்ந்து, முன்னுதாரணமாகத் திகழ்ந்திருக்கிறார் என்பது கிரிக்கெட் வரலாற்றில் ஓர் அதிசயம்தான்!



# "ஒவ்வொரு சாலைக்கும் ஒரு எஃப்.எம்!"

**தமிழ் மொழியில் பல்வேறு துறைகளுக்குப் பத்திரிக்கைகள் வெளி வந்து கொண்டிருக்கும் சூழலில் வானொலி நிகழ்ச்சிகளை மையப்படுத்தி சர்வதேச வானொலி என்ற பத்திரிக்கை வெளி வந்து கொண்டிருக்கிறது. இதன் ஆசிரியர் தங்க ஜெய்சக்திவேலைச் சந்தித்த போது...**

**வானொலிக்காக இதழ் தொடங்க வேண்டிய அவசியம் என்ன?**

''1990 முதல் வானொலி கேட்டு வருகிறேன். அன்றைய காலகட்டத்தில் வானொலி தகவல்களைப் பகிர்ந்து கொள்ள செய்தித்தாளோ பத்திரிக்கைகளோ இல்லை. இதனால் என் சொந்த ஊரான தாராபுரத்தில் சர்வதேச வானொலி மன்றத்தை ஏற்படுத்தினேன். உடுமலைப் பேட்டை அரசுக் கலைக் கல்லூரியில் ஆங்கில இலக்கியம் படித்தபோது சர்வதேச வானொலியைக் கையெழுத்துப் பத்திரிக்கையாகத் தொடங்கினேன். இன்று அச்சுப் பிரதியில் புத்தக வடிவமாக வந்திருக்கிறது. உலகளவில் சிற்றலை தொடர்பான நிகழ்ச்சிகளை, தமிழ் மக்கள் புரிந்துகொள்ளச் செய்வதே சர்வதேச வானொலியின் நோக்கம்.''

**இன்றைய இளைய தலைமுறைக்கு சிற்றலை ஒலிபரப்பு பற்றி விழிப்புணர்வு இல்லையே...?**

''இன்றைய இளைய தலைமுறைக்கு ஆக்கபூர்வமாக உதவுவது சிற்றலைதான். இன்று நான் சென்னையிலுள்ள பி.பி.சி. அலுவலகத்தில் பணிபுரிகிறேன். டென்மார்க் நாட்டிலுள்ள டேனிஷ் சாஃப்ட்வேர் கிளப் எனும் மிகப் பழைமையான ரேடியோ மன்றத்தில் உலகச் செய்திகள் தொடர்பான பணிகளையும் செய்கிறேன். சிற்றலை ஒலிபரப்பின் மூலம் பல்வேறு நாடுகளிலும் நண்பர்களைப் பெற்றிருக்கிறேன். இதெல்லாம் சிற்றலை வானொலி கேட்பதன் மூலமாகத் தான் சாத்தியமாயிற்று.

ஜெர்மன் கலாசார மையம் ஜெர்மன் மொழி வகுப்புகளை இந்தியர்களுக்காக நடத்துகிறது. அதே பாடத்தை இந்திய நேயர்களுக்காக ஜெர்மன் சிற்றலையும் ஒலிபரப்புகிறது. இதுபோன்ற கல்வி தொடர்பான நிகழ்ச்சிகள் சிற்றலையில் ஏராளம். சீன சிற்றலை வானொலி தமிழ் மொழியில் நிகழ்ச்சிகளை ஒலிபரப்புகிறது.

## கிசுகிசு பிரேக்

- இந்தியா சுதந்திரம் அடைந்த செய்தியை வானொலி மூலம் முதலில் தமிழில் அறிவித்தவர் பூர்ணம் விஸ்வநாதன். இவர் அகில இந்திய வானொலியின் டெல்லி செய்தி அறிக்கையில் இதனைப் படித்தார்.
- தமிழில் மிக அதிக நாட்கள் ஒரே நபரால் நடத்தப்பட்ட, நிகழ்ச்சி தென்கச்சி கோ.சுவாமிநாதன் வழங்கிய 'இன்று ஒரு தகவல்'தான். இது தொடர்ந்து 14 வருடங்கள் சென்னை வானொலியின் காலை மலரில் வலம் வந்தது.

கடிதத் தொடர்பின் மூலம் மிகச் சிறந்த நேயர் ஒருவரை ஒவ்வொரு வருடமும் இலவசமாகவே சீனாவுக்கு அழைத்துச் செல்கிறது. இதெல்லாம் இளைஞர்களுக்கு நல்ல விஷயம்தானே.

அமெரிக்காவுக்கும், ஆப்பிரிக்காவுக் கும் இடையில் அட்லாண்டிக் பெருங் கடலில் செயின்ட் ஹெலனா எனும் தீவு உள்ளது. இந்தத் தீவிலிருந்து சிற்றலை நிகழ்ச்சி ஒலிபரப்பாகிறது. இதைக் கேட்ப தற்குத் தமிழ்நாட்டிலும் நேயர்கள் இருக் கிறார்கள். மாவீரன் நெப்போலியனைச் சிறை வைத்த இந்தத் தீவிலிருந்து தமிழ் மொழி ஒலிப்பது தமிழர்களான நமக்கெல் லாம் பெருமைதானே! நமது அகில இந்திய வானொலி, வெளிநாட்டினர்க்கு சிற்றலை ஒலிபரப்பு வழங்குகிறது. இதில் ஆடிவரும் தமிழ் நாதம் எனும் பிரிவில் பல்வேறு நிகழ்ச்சிகளை நான் வழங்கி வருகிறேன். சிற்றலைகளுக்கு ஆறு மாதத் துக்கு ஒருமுறை அலை வரிசை எண் (frequency number) மாறக் கூடியது. வான் மண்டலத்தில் சூரியப் புள்ளியில் ஏற்படும் மாற்றமே இதற்குக் காரணம். உலகளவில் உள்ள அனைத்து நாடுகளின் சிற்றலைகள் ஒலிபரப்பை வரையறுக்கும் நிறுவனமாக International Telecommunication Union (ITU) எனும் சுவிட்சர்லாந்து நிறுவனம் செயல்படுகிறது.''


* தங்க ஜெய்சக்திவேல்

**தனியார் பண்பலைகள் கலாசார சீரழிவுக்கு வழிவகுக்கின்றனவா?**

''சில தனியார் பண்பலைகளில் அதுபோன்ற ஒரு சில நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகின்றன. சரியான நெறிப்படுத்துதல் இல்லாததே இதற்குக் காரணம். தரமான நிகழ்ச்சிகளுக்கு மக்களிடையே எப்போதுமே வரவேற்பு இருக் கும். தனியார் பண்பலை களும் பொறுப்புணர்ந்து செயல்பட வேண்டும். ஒரு நகரத்தில் சுமார் ஐந்து பண் பலைகளுக்கு அனுமதி கொடுத்தால், மற்ற பண் பலைகளுக்கு அருகில் உள்ள சிறு நகரங்களில் இடம் தரலாம். அமெரிக்காவில் இரு நகரங்களுக்கு இடைப்பட்ட சாலைக் கென்று ஒரு பண்பலை இருக்கிறது. அதில் அந்தச் சாலையில் நடக்கும் விபத்துக்கள், அவசர உதவிகள், முக்கிய நிகழ்வுகள் போன்றவற்றை ஒலிபரப்புகிறார்கள். இது போன்று நம்மூரிலும் செய்யலாம்.''

**வானொலியின் எதிர்காலம்...?**

''மிகப்பெரிய வால்வு ரேடியோக்களாக இருந்து இன்று செல் ஃபோனில்கூட கேட்குமளவுக்கு தொழில்நுட்பம் வளர்ந்து விட்டது. எந்தவிதத் தொழில்நுட்பத் தோடும் தன்னைப் பொருத்திக்கொள்வது வானொலி. சரியான முறையில் இளைஞர் களை வழிகாட்டினால் சிற்றலையும் அதிக வரவேற்பைப் பெறும்.''

**- ஆர்.குமார்**




"என் அப்பா கோபிநாத் டைரக்டர் என்பதால் சின்ன வயதிலேயே எனக்கும் சினிமா மீது ஆர்வம் ஏற்பட்டது. ஆனால், என்ன ஆகவேண்டும் என்ற தெளிவில்லாமலே சில காலம் இருந்தேன். என் அப்பாவின் நண்பரான ஒரு ஃபோட்டோகிராபர், என்னை விதம்விதமாக ஸ்டில்ஸ் எடுத்துக் கொடுத்தார். அதைப் பார்த்த பிறகுதான் சினிமாவில் ஹீரோவாக நடிக்க வேண்டும் என்ற ஆசையே எனக்கு ஏற்பட்டது. அந்த ஸ்டில்ஸை எடுத்துக் கொண்டு டைரக்டர் ஸ்ரீதரைப் போய் பார்த்தேன். அவர் வாய்ப்பு தரவில்லை. அப்போது டைரக்டர்கள் பாரதி-வாசு இருவரும் என்னைத் தற்செயலாகப் பார்த்தார்கள். அந்த நிமிடமே என்னைக் கதாநாயகனாக அறி

சிநேகாவை துப்பாகியும் கையுமாக அலைய வைத்துக் கொண்டிருக்கும் (பவானி ஐ.பி.எஸ். படத்துக்கான இன்ஸ்பெக்டர் வேடம்) இயக்குநர் ஜி.கிச்சா, ஆக்ஷன் கிங் அர்ஜுன் கையிலும் துப்பாக்கி கொடுத்திருக்கிறார், தான் இயக்கும் 'மாசி' படத்துக்காக. "ஏற்கெனவே எத்தனையோ படங்களில் அர்ஜுன் ஸார் இன்ஸ்பெக்டர் கேரக்டரில் நடித்திருந்தாலும் இந்தப் படத்தின் கதையில் வரும் அவர் கேரக்டர் இருபக்கமும் கூர்மையான கருக்குக் கொண்ட கத்திக்குச் சமமானது. பேச்சு வழக்குல, 'பையன் படு ஷார்ப்'னு சொல்வோம்ல... அதுமாதிரி அர்ஜுன் ஸார் இந்தப் படத்துல படு ஷார்ப். இவருக்கு ஆக்ஷனில் ஈடுகொடுத்து நடிக்கும் வில்லன் நடிகரை ஒரு மாதம் தேடி, பின்னர்தான் பொன்னம்பலத்தை நடிக்க



சவுண்ட் என்ஜினீயர் ஜி.கிருஷ்ணன் இயக்கும் காமெடி படம்தான் விகடகவி. "ஆடி மாசத்துல குழந்தை பிறந்தா வீட்டுக்கு ஆகாதுன்னு சொல்வாங்க. ஒரு ஊரில் ஐந்து குழந்தைங்க ஆடி மாசத்துல பிறக்கறாங்க. அவங்களால அந்த ஊர்ல நடக்கற ரசமான கலாட்டாக்கள்தான் கதை" என்கிறார் ஜி.கிருஷ்ணன்.

'வினோத் எதற்குமே அலட்டிக் கொள்ளாதவன். எல்லாவற்றையுமே ஈஸியாக எடுத்துக் கொள்பவன். கவிதாவோ பணக்காரியாக இருந்தாலும் ஏழைகள் மீது அன்பு செலுத்துபவள். பக்கத்து கிளாஸ் டீச்சரிடம் கொடுக்கச் சொல்லி வாத்தியார் கொடுத்த லவ் லெட்டரை ஹெட்மாஸ்டரிடம் கொடுத்துவிடுமளவுக்கு டயானா ஞாபக மறதிக்காரி. கருணாவோ அவனது காலடியில் வெடிகுண்டே வெடித்தாலும் என்னவோ சத்தம் கேட்குதே என்பதுபோல ஆமை வேகத்தில் நடக்கும் சரியான தத்தி கேரக்டர். பேரைக் கேட்டாலே நாலு ஊருக்குக் கேட்பதுபோல் எதையுமே சத்தமாகப் பேசக் கூடியவன் விருமாண்டி. இப்படி ஐந்து பேருமே வித்தியாசமான

முகப்படுத்துவது என்று முடிவு செய்துவிட்டனர். அப்போது இன்னொரு இன்ப அதிர்ச்சி பாரதிராஜா ஸாரும் 'அலைகள் ஓய்வதில்லை' படத்தின் ஹீரோவாக என்னை செலக்ட் பண்ணினார். இரண்டுமே நல்ல சான்ஸ். எதை செலக்ட் பண்ணுவது என்று குழப்பத்தில் என் அப்பாவிடம் கேட்டேன். 'உன்னை முதலில் ஹீரோவாக யார் செலக்ட் பண்ணினாரோ, அவரது படத்தில் நடிப்பதுதான் மரியாதை' என்றார்.

உடனே பாரதிராஜா ஸாரைச் சந்தித்து பாரதி - வாசுவின் படத்தில் என்னை ஹீரோவாக செலக்ட் பண்ணிய விஷயத்தைச் சொன்னேன். அவரும் பெருந்தன்மையோடு பன்னீர் புஷ்பங்கள் படத்தில் நடிக்கும்படி வாழ்த்தி அனுப்பினார். 'பன்னீர் புஷ்பங்கள்' படம் மிகப்பெரிய வெற்றியடைந்து என் வாழ்க்கையையே மாற்றியது'' என்று சொல்லும் சுரேஷ், தெலுங்கில் ஆக்ஷன் ஹீரோவாகப் பெயர் வாங்கியவர். ''தமிழில் எனக்குக் கிடைத்ததைப் போலவே தெலுங்கிலும் பெரும் புகழும் கிடைத்தன. பல படங்களில் நடித்த பிறகு நான்கு படங்களைச் சொந்தமாகத் தயாரித்தேன். அது மட்டுமல்ல, ஆறு டெலிவிஷன் தொடர்களையும் தயாரித்தேன்'' என்கிறார்.

'அசல்' படத்தில் நடிக்கிறீர்களே...

''சரண் யங் டைரக்டர். சிவாஜி ஃபிலிம்ஸ் பெரிய பேனர். அஜீத் காம்பினேஷன் வேறு. புது டீமில் வொர்க் பண்ணுவது என்னை நானே புதுப்பித்துக் கொள்வதற்குச் சமம்.''



# மாசி

வைத்தோம். பொன்னம்பலமும், அர்ஜுனும் மோதும் ஆக்ஷன் சீக்வன்ஸ் ஒண்ணு, ஹைதராபாத் அலுமினிய ஃபேக்டரியில ஏழு கேமராவை வெச்சுப் படமாக்கினோம். படம் வந்ததும் அந்த ஃபைட் நிச்சயம் பேசப்படும்'' என்கிறார் இயக்குநர் ஜி.கிச்சா. 'மாசி' அர்ஜுனின் 140வது படம். இதை கே.எஸ்.கோவை மணியின் அன்புலட்சுமி ஃபிலிம்ஸ் மிகப் பிரம்மாண்டமாகத் தயாரிக்கிறது.

''இயக்குநர் கிச்சா வித்தியாசமானவர். டயலாக் ஸ்கிரிப்டைப் பார்க்காமலே எந்த டயலாக் எந்த ஸீனுக்கு என்று மனப்பாடமாகச் சொல்கிறார்'' என்று ஆச்சரியப்படுகிறார் அர்ஜுன்.

கேரக்டர்களாக இருந்தாலும் ஒருத்தரை ஒருத்தர் விட்டுக்கொடுக்காத நண்பர்கள். இவர்களை வைத்து சுவாரஸ்யமாக ஒரு கதையைச் சொல்லி இருக்கிறேன். படத்தைப் பார்த்துவிட்டு தியேட்டரிலிருந்து வெளியே வரும்போது நிறைவான மனசோடு வருவார்கள். அந்த அளவுக்கு காமெடி என்டர்டெயின்மெண்ட் படமாக விகடகவி இருக்கும்'' என்கிறார் இயக்குநர் ஜி.கிருஷ்ணன்.

- கமலி



# இலவச என்டர்டெய்னர்



## ரெண்டு ஆர்.ஜேஸ் x மூணு கொஸ்டின்ஸ் = ஆறு ஆன்ஸர்ஸ்...

**சுசித்ரா (செல்லமாக சுச்சி)விடம்:**

**ஆர்.ஜே செய்யக்கூடியது, செய்யக் கூடாதது?**

''ஹே, அப்படி எல்லாம் எதுவும் இல்லை. அது ரேடியோ ஸ்டேஷனைப் பொறுத்த விஷயம். இப்போ, டாக் ரேடியோவா இருந்தா அதுல நிறைய பேசணும். மியூசிக் ரேடியோவா இருந்தா, கொஞ்சமா பேசினா போதும்.''

**மறக்க முடியாத நேயர்?**

''குமார்ன்னு ஒருத்தர் பேசுவார். நான் எந்த டாபிக் பத்திப் பேசினாலும் அந்த டாபிக் பத்தி தகவல்கள் கொடுத்து அசத்து வார். ஒரு நாள் ஷோவுல, யார் யாருக்கு என்னென்ன நிறங்கள் பிடிக்கும். நமது எணணங்களுக்கும் வண்ணங்களுக்கும் தொடர்பு உண்டான்னு பேசிக்கிட்டு இருந் தோம். அப்போ குமார் கால் பண்ணினார். 'சொல்லுங்க குமார், உங்களுக்கு பிடிச்ச கலர் எது?'ன்னு நான் கேட்க, அவர் உடனே, 'இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லணும்னு ஆசையாதான் இருக்கு. ஆனா எனக்குக் கண்ணு தெரியாதே'ன்னு சொன்னதைக் கேட்டு நான் ரொம்ப எமோஷனலாயிட்டேன். 'எஃப்.எம். எனக்குப் புது உலகத்தைக் காண்பிச்சி ருக்கு' என அவர் சொன்ன வார்த்தைகள்

### நியூஸ் ப்ரேக்

● இந்தியாவில் முதல் எஃப்.எம் ஒலிபரப்பு சென்னையில்தான் தொடங்கப்பட்டது. 1977ல் தொடங் கப்பட்ட போது எஃப்.எம் வானொலிப் பெட்டி களின் எண்ணிக்கை வெறும் 1500.

● தற்போது இந்தியாவிலேயே மிக அதிக நேயர்களைக் கொண்ட சமு தாய வானொலி திண்டுக்கல் பசுமை எஃப்.எம்.தான் இரண்டு லட்சத்துக் கும் அதிகமான நேயர்களைத் தன்ன கத்தே இது கொண்டுள்ளது.

# "எஃப்.எம். எனக்குப் புது உலகத்தைக் காண்பிச்சிருக்கு!"



என் காதுக்குள்ளே இன்னும் ஒலிச்சுக்கிட்டே இருக்கு.''

**ஆர்.ஜேக்களுக்கு எது சவால்?**

''நமது குரல் எப்பவும் ஃப்ரெஷ்ஷாகவே இருக்கணும். ஜலதோஷத்தினால் குரல் கொஞ்சம் மாறுபட்டு இருந்தால்கூட அதை நேயர்கள் கண்டு பிடிச்சுடுவாங்க... நேயர்களுடன் எப்பவும் குஷியாகப் பேசுவதே ஒரு பெரிய சவால்தானே?''

**அடுத்த மூன்று கேள்விகள் ஆர்.ஜே. தீனாவுக்கு அளிக்கப்படுகின்றன...**

**ஒரு ஆர்.ஜேன்னா எப்படி இருக்கணும்?**

''இயற்கையாகவும், எளிமையாகவும், பேசினால் போதும்.''

**நீங்க அடிக்கடி ரேடியோவில் பேசக்கூடிய ஒரு டாபிக்?**

''தினம் ரோட்ல பாக்கற விஷயங்களைத்தான் நான் அதிகம் பேசுவேன். 'ட்ராஃபிக் ரூல்ஸை மீறக்கூடாது, ப்ளாஸ்டிக் பைக்குப் பதிலா பேப்பர் பேகைக் கொண்டு போங்க... பாருங்க அக்டோபர்ல பெய்ய வேண்டிய மழை இன்னும் நம்மை வந்து எட்டிப் பார்க்கல பார்த்தீங்களா... இதுக்குப் பேருதான் க்ளோபல் வார்மிங்'ன்னு சொல்லிக்கிட்டு இருப்பேன்.''

**வானொலி?**

''அதி அற்புதமான மீடியா. டீ.வி. பார்க்கணும்னா கேபிள் கனெக்ஷனுக்குப் பைசா கட்டணும். அதைப் பார்க்க நேரம் ஒதுக்கணும். பேப்பர் படிக்கணும்னா கூட காசு கொடுத்து வாங்கி, அதைப் படிக்க நேரம் ஒதுக்கணும். ஆனா வானொலி அப்படி கிடையாது. சும்மா 150 ரூபா கொடுத்து ஒரு தடவை ரேடியோ வாங்கிட்டா போதும். பத்துக்கும் மேற்பட்ட சானல்களை ஜாலியா கேட்டுக்கிட்டே இருக்கலாம். இது ஒரு இலவச என்டர்டெய்னர்!''

**– நளினி சம்பத்குமார்**

இருள் பூசிய அந்தப் பொழுதின் மீது மின்மினிப் பூச்சிகள் வெளிச்சம் தெளித்த படியிருக்க, ஓவியர் பத்மராஜன் ரெயின்போ FM-ல் மயிலிறகைக் கேட்டுக் கொண் டிருக்கிறார். 1972-லிருந்து வரையத் தொடங்கியவர் இன்றைய பொழுது வரை ஓவியத்தைச் சுவாசமாகச் சுவிகரித்துக் கொண்டவர். பணத்தைச் சம்பாதிக்காமல் சிஷ்யர்களைச் சிருஷ்டித்தேன் என கலைகர்வம் கொள்ளும் இவரிடமிருந்துதான் மணிராஜ் (குருவி, தெனாலி பட ஆர்ட் டைரக்டர்), முத்துராஜ் (சொல்ல மறந்த கதை ஆர்ட் டைரக்டர்), கேமராமேன்கள் வைத்தி, ஸ்ரீராம் சந்தோஷ் ஆகியோர் பால பாடம் பயின்று நகர்ந்தவர்கள். இவர் தூரிகையைவிட கத்தியைக் கொண்டு வண்ணத்தைத் தடவிச் செதுக்குவதில் விருப்பமானவர். 32 வருட அனுபவ ஓவிய ஆசிரியரான இவரிடம் உங்களின் ஆசை என்ன என்றால்...

''கத்துத் தர ரெடி! புதுசா யாராவது சிஷ்யர் வேணுமே.''

**- அமிர்தா**

படங்கள்: **சின்னராஜ்**

# ரெயின்போ



"ஒரு ரேடியோ நிகழ்ச்சியின் மூலம் தெருவில் குப்பைக் காகிதம் பொறுக்கிக் கொண்டிருந்த சிறுவனை, அவனது பெற்றோர்களிடம் சேர்த்த நெகிழ்ச்சியான அனுபவம் எனக்கு உண்டு" என்கிறார் அகில இந்திய ரேடியோ பண்பலை ஒலிபரப்பில், 'சினிமா நேரம்' என்ற மிகப் பிரபலமான நிகழ்ச்சியை அளித்தவரான என்.சி. ஞானப்பிரகாசம். இப்போது பணி ஓய்வு பெற்று, தகவல் தொடர்புத் துறை மாணவர்களுக்கு, வகுப்புகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்.

"அகில இந்திய வானொலியில் கூத்தபிரான் ஓய்வு பெற்றவுடன், அவர் நடத்தி வந்த குழந்தைகள் நிகழ்ச்சி நடத்தும் பொறுப்பு எனக்கு அளிக்கப்பட்டது. அந்த ஆண்டு அகில உலகக் குழந்தைகள் ஆண்டு என்பதால், வித்தியாசமான குழந்தைகள் நிகழ்ச்சி ஒன்றை நடத்த விரும்பினேன். சென்ட்ரல் ஸ்டேஷன் அருகில் குப்பையில் காகிதம் பொறுக்கிக்கொண்டிருந்த இரண்டு பையன்களை, அவர்கள் தினம் சம்பாதிக்கும் 25 ரூபாய்க்குப் பதிலாக 50 ரூபாய் கொடுத்து வானொலி நிலையத்துக்கு அழைத்து வந்தேன்.



# பையனுக்கு மகிழ்ச்சி... எங்களுக்கு நெகிழ்ச்சி...

'அவர்கள் யார்? குடும்பப் பின்னணி என்ன? ஏன் வீட்டை விட்டு ஓடி வந்தார்கள்? எப்படி குப்பைக் காகிதம் பொறுக்க ஆரம்பித்தார்கள்? எங்கே தங்கி இருக்கிறார்கள்?' என்றெல்லாம் நிறைய கேள்விகள் கேட்டு, அவர்களைப் பதில் சொல்ல வைத்தேன். அப்பா அடித்ததால் வீட்டை விட்டு ஓடி வந்து விட்டதாக அவர்கள் சொன்னபோது, 'குழந்தைங்க தப்பு பண்ணினா பெத்தவங்க அடிக்க மாட்டாங்களா? நீங்க நல்லா இருக்கணும்னு தானே கோவிச்சுக்கறாங்க? அதுக்காக வீட்டை விட்டு ஓடி வந்திடறதா? உங்களைக் காணோம்னு அவங்க தவிக்க மாட்டாங்களா?' என்றெல்லாம் அவர்களுக்கு அறிவுரை சொன்னேன். நிகழ்ச்சி முடிந்ததும், அவர்கள் இரவு நேரங்களில்



✱ சினிமா நேரம் நிகழ்ச்சியில் நடிகை சுகன்யாவைப் பேட்டி காண்கிறார்...

தங்கும் ஓர் இல்லத்தில் கொண்டுபோய் விட்டுவிட்டு வந்தேன்.

திண்டிவனத்தில் ஒருவர் இந்த நிகழ்ச்சியைக் கேட்டிருக்கிறார். ரேடியோவில் பேசியது காணாமல்போன அவரது மகனின் குரல் போல இருந்திருக்கிறது. அந்த நிகழ்ச்சியைக் கேட்ட அவர்களின் இன்னொரு உறவினருக்கும் ரேடியோவில் கேட்ட குரல் காணாமல் போன அவர்கள் வீட்டுப் பையன் போலவே இருப்பதாகத் தோன்றியிருக்கிறது. இருவரும் வானொலி நிலையத்துக்கு வந்துவிட்டார்கள். பையன்களின் பேட்டியின் ஒலிப்பதிவை அவர்களுக்குப் போட்டுக் காட்ட, அவர்கள் அது தங்கள் பையனின் குரல்தான் என உறுதிப்படுத்தினார்கள்.

அவர்களை அந்தப் பையன்கள் வசிக்கும் இல்லத்துக்கு அழைத்துச் சென்றேன். உண்மையிலேயே அந்த இருவரில் ஒருவன் அவர்கள் வீட்டுப் பையன்தான். பிரிந்த குடும்பம், மகிழ்ச்சியோடு மீண்டும் ஒன்று சேர்ந்ததை என்னால் மறக்கவே முடியாது'' என்றவரின் குரலில் ஏகத்துக்கு நெகிழ்ச்சி!

**- மௌலி**

## நியூஸ் ரீல்

● இந்தியாவிலேயே முதன்முதலில் வானொலி ஒலிபரப்பு மும்பையில் 'டைம்ஸ் ஆஃப் இந்தியா' - வினால்தான் தொடங்கப்பட்டது. அதன்பின்தான் அகில இந்திய வானொலி தனது சேவையைத் தொடங்கியது. 1936-ல்தான் இந்தப் பெயரே வைக்கப்பட்டது. இந்தியன் ப்ராட்காஸ்டிங் கம்பெனி 1927ல் தனது சேவையைத் தொடங்கியது.

## நாடக விமர்சனம்

கே.பாலசந்தரின் கவிதாலயா கிரியேஷன்ஸின் புதிய நாடகம் 'ஒரு கூடை பாசம்.' தமிழ் சபா நாடகங்களில் எழுபதுகளில் பெரிய மாற்றங்களை ஏற்படுத்தியவை பாலசந்தரின் நாடகங்கள். இந்த நாடகத்தை பாலசந்தர் எழுதி இயக்கியிருக்கிறார். இயக்கத்தில் உதவி அமீர்ஜான். ரேணுகா, பூவிலங்கு மோகன், டெலிஃபோன் வெங்கட்ராமன் போன்றோர் இந்த நாடகத்தில் நடித்திருக்கின்றனர்.

கதை இதுதான். கல்யாணத்தில் விருப்பமில்லாத அக்கா. அக்கா வளர்த்த இரண்டு தம்பிகளும், அக்கா கிழித்த கோட்டைத் தாண்டாதவர்கள். அந்த அக்காவுக்கு எப்படி கல்யாணம் ஆகிறது என்பதுதான் கதை. இதைப் போல் எத்தனை கதைகளை நாம் படித்திருப்போம்?

சரி, காட்சிகளில் ஏதேனும் புதுமை இருக்கிறதா என்று பார்த்தபோது, இரண்டு மூன்று நல்ல விஷயங்கள் தென்பட்டன.

இந்தக் காட்சிகளுக்கு வெளியே, மேல் போர்ஷனிலும் கீழ் போர்ஷனிலும் இரண்டு பேர் தம் இசையாலேயே காதலிப்பதாக ஒரு தோற்றம் உருவாக்கப்பட்டிருக்கிறது. மிகவும் கவித்துவமான கற்பனை. வெறும் பேச்சு, ஒலி, இசையை வைத்தே இந்தக் கற்பனை உருவாக்கப்பட்டிருப்பது அருமை.

ஹீரோவும் ஹீரோயினும் ஒரு காட்சியில், முந்தின நாள் அலுவலகத்தில் நடந்த சண்டையை விவரிக்கிறார்கள். மிக நேர்த்தியான வசனங்களில் அதை அழகாகக் கண்முன் கொண்டு வந்திருக்கிறார் பாலசந்தர்.

பாலசந்தர் என்றாலே ஒரு சில ஸ்டீரியோ டைப் பாத்திரங்களை நீங்கள் எதிர்பார்க்கலாம். இந்த நாடகத்திலும் அந்தப் பாதிப்பு உண்டு. ரேணுகா முதல் உதாரணம். கண்மணி பாத்திரத்தில் நடித்த ஐஸ்வர்யா இன்னொரு உதாரணம். மேடை நாடகம் என்றாலே ஒருவித அதீத ஆக்டிங் செய்யவேண்டும் என்று யார் சொல்லிக்கொடுத்தார்களோ தெரியவில்லை. இன்னும் நாம் என்ன சுவாமி சங்கரதாஸ் காலத்திலா இருக்கிறோம்?

சினிமாவில்தான் கண்டம் விட்டு கண்டம் தாண்டிப் போய் டூயட் எல்லாம் பாடிக் கொடுமைப்படுத்துகிறார்கள் என்றால், இந்த நாடக மேடையிலும் டான்ஸ் ஆடி காதல் வளர்க்கிறார்களாம்.

மேடையை முழுமையாகப் பயன்படுத்த வேண்டும் என்று ஏன்தான் இயக்குநருக்குத் தோன்றவில்லையோ? ரேணுகாவும் அவள் காதலரும் மேடை நடுவே அமரிக்கையாக சேர் போட்டு உட்கார்ந்துகொண்டு டயலாக் பேசுகிறார்கள். எந்த வீட்டில் சார் நாம் இப்படி எல்லாம் உட்கார்ந்துகொண்டு காதல் வளர்க்கிறோம்?

பாலசந்தர் என்றாலே புதுமையான சிந்தனை, புதுமையான கருத்துகளை உடையவர் என்று சொல்வார்கள். இந்த நாடகத்தில் ஏதேனும் புதுமையாகச் சொல்லியிருக்கிறாரா?

பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம் பாலசந்தர்! ○

ஆர். வெங்கடேஷ்



# பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம்!

## அருள்வாக்கு



# ஆத்மா

அன்பு என்றால் என்ன? நம் மனஸ் இன்னொரு மனஸில் அப்படியே கலந்து விடுவது. முடிவுநிலை என்ன? ஆத்மாவிலே மனஸ் கரைந்துவிட வேண்டும். அப்படி ஆத்மாவிலே மனஸ் கரைவதற்கும் இன்னொரு மனஸிலே அன்பாலே கலப்பதற்கும் என்ன சம்பந்தம்?

கரைவதற்கும் முந்திய ஸ்டேஜ் கலப்பது. சர்க்கரையை முதலில் பாலில் போட்டுக் கலக்க வேண்டும். அப்புறம்தான் கரையும். இரண்டு வஸ்துக்கள் ஒன்றுக்கொன்று அந்நியமாக இருக்கும்போது இரண்டும் ஒன்றோடொன்று கலக்கின்றன. அப்புறம் ஒன்றிலே மற்றது கரைய ஆரம்பித்து முடிவாகக் கரைந்து முடிந்தபின், இரண்டு இல்லை; ஒன்றுதான் இருக்கிறது. இதை 'ஐக்யம்' ஆகிவிடுவது என்பார்கள். 'ஏகம்' என்ற ஒன்றின் தன்மையை அடைவதே 'ஐக்யம்'.

'கலப்பு' என்பது இரு வேறு வஸ்துகள் உள்ளபோதுதான் ஏற்பட முடியும். அது ஏகமான, அத்வைதமான கரைப்பில்தான் முடிந்தாக வேண்டும் என்றில்லை. த்வைதக் கலப்பு அப்படியே நின்றுவிடலாம். அக்ஷதையையும் எள்ளையும் வாத்யார் கலந்து வைக்கிறார். அவை ஒன்றில் இன்னொன்று கரைந்து ஐக்கியமாகி விடுவதில்லை.

ஆத்மா, வேறு ஒன்றின் கலப்பே இல்லாமல் தன்னில் தானாக, தனியாக இருப்பது. அதனால் அதிலே கொண்டுபோய் மனஸைக் கலப்பது என்றால் முடியாத கார்யம். மனஸ்தான் ஆத்மாவின்கிட்டேயே போக முடியாதே! இதை எப்படி அதில் போய்க் கலக்கும்படி செய்வது? இந்த இடத்தில்தான் இரண்டாக இருந்து கலக்கக் கூடியதாக அந்த ஆத்மாவையே, ஈச்வரன் என்று வைத்து பக்தி பண்ண வேண்டியிருக்கிறது. பரமாத்மா, ஜீவாத்மா என்று த்வைதமாகப் பிரித்துச் சொல்வது இங்கேதான். ஜீவாத்மா சின்ன மனஸ்; பரமாத்மா மஹா மனஸ். சின்ன மனஸ், எந்தத் தொடர்புமில்லாத ஆத்மாவோடு கலக்க முடியாது. ஆனால், அதைப் படைத்த மஹா மனஸோடு கலக்க முடியும். இதை அதுதான் படைத்தது என்பதாலேயே, தாயாரிடம் குழந்தை அன்போடு கலக்கிற மாதிரி கலக்க முடியும். அந்தப் பரமாத்மாவும் தாயார் மாதிரி அன்போடு ஜீவாத்மாவுடன் கலந்து அநுக்ரஹம் செய்வார்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

''**மீ**ண்டும் ஒரு 'வா, மனம் விட்டுப் பேசலாம்' நிகழ்ச்சியில் உங்களைச் சந்திப்பதில் மிகுந்த மகிழ்ச்சியுடன் உங்கள் அன்பு நிரஞ்சன்'' என்று தொகுப்பாளர் உற்சாகமாக ஆரம்பித்தார். அரங்கத்தில் எதிரெதியாக அமர்ந்திருந்த கணவன்மார்களும், மனைவிமார்களும் அதே உற்சாகத்துடன் கை தட்டினார்கள்.

மூன்று கேமராக்களும் சுழன்று நிகழ்ச்சியைப் பதிவு செய்யத் தொடங்கின.

''இன்றைக்கு நாம பேசப்போற தலைப்பு: 'இல்லதரசிகளுக்குப் பூரண சுதந்திரம் இருக்கிறதா, இல்லையா?'



# வா, மனம் விட்டுப்

மொதல்ல நான் கணவர்கள்கிட்ட கேக்கறேன். எதை வெச்சு ஸார் அவங்களுக்கு சுதந்திரம் நிறைய இருக்குன்னு சொல்றீங்க?''

சிவநேசன் ஆர்வமாக மைக்கை வாங்கிப் பேசினான். ''நியாயமா கல்யாணமான ஆண்களுக்குச் சுதந்திரம் இருக்கா, இல்லையான்னுதான் நீங்க கேள்வியே கேட்டிருக்கணும். தாலின்னு ஒண்ணு கட்டின அடுத்த நிமிஷத்துலேர்ந்து இந்தப் பொண்டாட்டிங்க நடத்துற லொள்ளு ராஜ்யம் இருக்கு பாருங்க... அப்பப்பா... தாங்க முடியலை ஸார்.''

''எதை வெச்சு சொல்றீங்க?''

''ஒரு ஃப்ரண்டு ஊர்லருந்து வர்றான்னு வைங்க. இவங்களுக்கு மூட் இருந்தாத்தான் நான் அவனை வீட்டுக்குச் சாப்பிடக் கூப்பிட முடியும். கல்யாணத்துக்கு முன்னாடி நினைச்சா வெளியூர் டூர் போவேன் ஸார். இப்ப ஃப்ரண்ட்ஸோட அப்படி டூர் போக முடியுதா?''

''உங்க மனைவி வந்திருக்காங்களா?''

''ம்... வந்திருக்காங்க ஸார்... அதோ...''

அவர் சுட்டிக்காட்டிய அந்தப் பெண்ணிடம் திரும்பினார் நிரஞ்சன். ''கொஞ்சம் எந்திரிங்கம்மா. உங்க பேர் என்ன?''

''பத்மா...''

''உங்க கணவர் சொல்றதை ஒத்துக்கறீங்களா?''

''இல்லைங்க. திடீர்னு நாலு பேரைக் கூட்டிட்டு வந்து பத்து நிமிஷத்துல சாப்பாடு ரெடி பண்ணுன்னா எப்படிங்க பண்ண முடியும்? போன மாசம்கூட ஃப்ரண்ட்ஸோட குற்றாலம் போய்ட்டுத்தான் வந்தார். ஒரு ஞாயித்துக்கிழமைகூட வீட்ல தங்கறதில்ல. வாரத்துல ஆறு நாள் ஆஃபீஸ் போய்டறாரு. அந்த ஒரு நாள் குடும்பத்தோட இவர் இருக்கணும்னு நான் எதிர்பார்க்கறதுல என்ன ஸார் தப்பு?''

''ரொம்ப நியாயம்மா. வேற என்ன இவர்கிட்டருந்து நீங்க எதிர்பார்க்கறீங்க?''

''என்னோட விருப்பம், கருத்து எதையுமே காதுல போட்டுக்க மாட்டார். எப்பப் பாருங்க, ஆஃபீஸ்லருந்து வர்றப்ப உர்ருன்னுதான் வருவாரு. இவரு போய் என்னைக் கேட்டுட்டு ஒவ்வொண்ணையும் செய்யறதா சொல்றாரு...''

''என்னங்க, உங்க மனைவி இப்படிச் சொல்றாங்க?''

''ஸார், இந்த சிட்டி டிராஃபிக்ல

நட்சத்திர சிறுகதை 5

# பேசலாம்!



பட்டுக்கோட்டை பிரபாகர்

ஆஃபீஸுக்குப் போறது, வர்றதே பெரிய பாடா இருக்குது. எந்த ஆஃபீஸ்ல ஸார் சீனியர் ஆஃபீஸர்ஸ் ஸ்மூத்தா நடந்துக்க றாங்க? அந்த டென்ஷன்லாம் இவங் களுக்கு என்ன தெரியும்? வீட்டுக்கு வந் ததும் நாய் குட்டி போட்டுச்சு, நான் புதுசா கோலம் போட்டேன்னு உப்பு சப்பில்லாம பேசினா கோபம் வராதா?''

பத்மா குறுக்கிட்டு, ''ஸார்! இவர் நான் பேசறதெல்லாம் கேக்கணும்னுகூட அவசியமில்ல. சாப்பிட்டியா, தலை வலிக் குதுன்னு சொன்னியே, இப்ப எப்படி யிருக்கு - இப்படி ரெண்டு வார்த்தை அனுசரணையா கேட்டாலே போதுமே சொல்றீங்க?''

சிவநேசனுக்கு மேல்வரிசையில் இருந்த ஜெயபால் மைக்கை வாங்கினான்.

''ஸார், நான் வாங்கற சம்பளத்தை முழுசா அப்படியே கவரோட கொண் டாந்து குடுத்துடறேன். வீட்டு பட்ஜெட் அவதான் போடறா. என்ன சினிமா போகணும் - அவதான் முடிவு பண்றா. ஸார், எங்க குழந்தைக்கு என்ன பேர் வெக்கணும்னுகூட அவதான் சார் முடிவு பண்ணா... இன்னும் என்ன ஸார் சுதந்திரம் வேணும்?''

''உங்க மனைவி இங்க வந்திருக் காங்களா?''

## யானைகளின் வீடு!

**ம**னைவி பிரமிளா, மகள்கள் பென்சி, காவேரி உட்பட ஷாஜியின் குடும்ப உறுப் பினர்களின் எண்ணிக்கை 21. இரண்டு வயதாகும் கண்ணனும் சிவனும் லிட்டில் ஸ்டார்ஸ் என்றால், 10 அடி 2 அங்குல உயர அனந்த பத்மநாபனும், 20 அங்குல கனமுள்ள அர்ஜுனும்தான் சூப்பர் ஸ்டார்ஸ்.

பத்து அடி உயரம், 20 அங்குல கனமா எனப் பதறாதீர்கள். அவை எல்லாம் ஷாஜி வளர்த்து வரும் யானைகள். கேரள மாநிலம் பரவூரில் ஷாஜி செல்லமாய் பதினேழு யானை களை வளர்த்து வருகிறார். அட! ஒரு யானைக்கு ஒரு நாளைக்கு சுமார் 1500 தான் ஆகுமாம்.

இவரிடமுள்ள யானைகள் நவம்பர் மாதங்களில் பீகார் மாநிலம் சோன்பூரில் நடக்கும் 'கஜமேளா'வில் வாங்கி வரப்பட் டவை. இப்போது யானைகளை மாநிலம் தாண்டிக் கொண்டு செல்லத் தடை விதிக்கப் பட்டுள்ளதால், முன்பு போல் யானைகளை வாங்க முடியவில்லை என்பதில் ஷாஜிக்கு

ஸார்.''

பேசிக்கொண்டே இருந்த பத்மாவுக் குக் குரல் அடைத்து, கண்ணீர் துளிர்க்க, மேற்கொண்டு பேச முடியாமல் அமர்ந்து விட்டாள். எதுவும் பேசாமல் அமைதியாக நின்றார் சிவநேசன்.

''உங்க அமைதி அவங்க குற்றச்சாட்டை நீங்க ஒத்துக்கிட்டீங்கன்றதுக்கு அர்த்தம். ஸோ... இந்தக் குடும்பத்தைப் பொறுத்த வரைக்கும் இவர் மனைவிக்கு வீட்ல அவங்க விரும்பற சுதந்திரம் இல்லை. நெக்ஸ்ட்... வேற யார் கருத்து

''ம்... வந்திருக்காங்க...''

''உங்க பேர் என்ன சொல்லுங்க?''

''செல்வி ஸார்...''

''நீங்க என்ன சொல்றீங்க?''

''அவர் சொல்றது எல்லாமே பொய் ஸார். சம்பளத்தை கவர்ல குடுப்பாரு. உண்மைதான்! ஆனா அவரோட உண்மை யான சம்பளம் என்னன்றது ரொம்பநாள் வரைக்கும் எனக்குத் தெரியாது. அவரோட ஃப்ரண்டு மூலமா தெரிஞ்சப்ப, அத்தனை நாளா என்னை ஏமாத்திருக்காருன்றது புரிஞ் சது. சரி, எனக்குக் கொடுக்காம மிச்சப்

படுத்தின பணத்தை ஏதாவது பேங்க்ல சேர்த்து வெச்சிருக்காரான்னு கேளுங்க...''

''என்ன மிஸ்டர், அவங்க உங்களை க்ளீன் போல்ட் பண்ணிட்டாங்களே?''

''ஸார், ஒரு ஆம்பளைக்கு ஆயிரம் செலவு இருக்கும். கொஞ்சம் பர்ஸனல் மேட்டர்ஸூம் இருக்கும். எல்லாத்தையும் பொண்டாட்டிகிட்ட சொல்லமுடியுமா ஸார்?''

''பொண்டாட்டிகிட்ட சொல்ல முடியாத பர்சனல்னா அது தப்பான விஷயமாதான் ஸார் இருக்க முடியும்.''

''வெளில போற ஆம்பளைக்கு ஒண்ணு ரெண்டு பழக்கங்கள் இருக்கத்தான் செய்யும். எந்த வீட்ல இல்ல? அப்புறம் அரசாங்கமே எதுக்காக தெருவுக்குத் தெரு நடத்தறாங்க?''

''சரி, அவர் எனக்குத் தெரியாம காசைக் கரியாக்கி உடம்பையும் கெடுத்துக்கறாரு. அதை விடுங்க. எனக்குப் பிடிச்ச மாதிரி ஒரு தடவைகூட நான் புடைவை எடுத்ததில்லங்க. கடைக்குப் போனா அவர் தாங்க முடிவு பண்ணுவாரு. கேட்டா, நீ கட்டற புடைவையை நான்தானேடி ரசிக்கப் போறேன்... அப்படிம்பாரு.''

ஜெயபால் சற்றுக் கோபமாக, ''அவன் அவன் குடும்பத்துக்குக் காசே குடுக்காம பட்டினி போடறான். நான் என்ன குறை வெச்சிருக்கேன். என்ன தனிப்பட்ட ரசனை வேண்டிக் கிடக்கு? சம்பாதிக்கிற என்னோட இஷ்டப்படி நடந்துக்கறதுல என்ன பிரச்னை இவளுக்கு?''

''அப்ப, அவங்க சம்பாதிச்சாங்கன்னா அவங்க இஷ்டப்படி நடந்துக்கலாம். ஸோ, பொருளாதாரம்தான் சுதந்திரத்தைத் தீர்மானிக்குதுன்னு சொல்றீங்களா?''

''அப்படி இல்ல ஸார். புருஷனுக்குப் பிடிச்ச மாதிரிதானே பொண்டாட்டி நடந்துக்கணும்?''

''இது ஒரு ஆணாதிக்கக் கருத்தா நீங்க நினைக்கலையா?''

''இதைவிட பொண்டாட்டியை மோசமா நடத்துறவன்லாம் இருக்கான் ஸார்...''

''நீங்க பேசறது அடாவடித்தனமான வாதம். சரி, உங்களுக்கு என்ன பிடிக்கும்னு உங்க மனைவிக்குத் தெரியுமா? ஏம்மா... சொல்லுங்க...''

''தக்காளி தோசை, உருளைக்கிழங்கு பொறியல்.''

வருத்தம்!

வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளுக்கும், குழந்தைகளுக்கும் ஷாஜியின் வீட்டிலிருந்து சமீபத்தில் உள்ள அவரது யானைக் கொட்டடி ஒரு சுற்றுலாத் தலமாகிவிட்டது.

யாருக்கும் தலைவணங்காத அனந்த பத்மநாபனும், அர்ஜுனும் ஷாஜியிடம் சரணடைந்து குழந்தைகள் போல் கொஞ்சுவதைப் பார்க்கையில் தோன்றுகிறது - 'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்!'

- எஸ்.எஸ்.மணி, திருவனந்தபுரம்



''கரெக்டா ஸார்?''

''கரெக்ட்டுதான்!''

''இப்ப நீங்க சொல்லுங்க... உங்க மனைவிக்குப் பிடிச்ச உணவு வகை எது?''

''அது... அவளுக்கு எல்லாமே பிடிக்கும் ஸார்...''

''இது சமாளிஃபிகேஷன்! கல்யாணமாகி எத்தனை வருஷம் ஸார் ஆச்சு?''

''பத்து வருஷம்!''

''உங்க மனைவிக்குப் பிடிச்ச உணவு தெரியல. ஆனா, அவங்க உங்களைப் பத்தி எல்லாம் தெரிஞ்சு, உங்க கோபதாபம் எல்லாத்தையும் புரிஞ்சு அதுக்குத் தகுந்த மாதிரி நடந்துக்கணும். என்ன ஸார் நியாயம் இது?''

ஜெயபால் மேற்கொண்டு பேச முடியாமல் தவித்தான். இப்போது சிவநேசன் மீண்டும் மைக்கை வாங்கி, ''ஸார்! மொதல்ல நீங்க கேட்டப்ப என்னால பதில் சொல்ல முடியல. ரொம்ப வெளிப்படையா சொல்லணும்னா என் மனசுல இப்போ குற்ற உணர்ச்சி குறுகுறுங்குது ஸார். என் மனைவி பத்மா இங்க இத்தனை பேருக்கு முன்னாடி கண்ல தண்ணி விட்டு அழுதது என்னை ரொம்ப டிஸ்டர்ப் பண்ணிடுச்சு. இத்தனை பேர் முன்னாடி பகிரங்கமா அவகிட்ட நான் மன்னிப்பு கேட்டுக்கறேன். இனிமே என்னுடைய ஆஃபீஸ் டென்ஷனை வீட்ல காட்ட மாட்டேன்'' என்றான்.

நிரஞ்சன் உற்சாகமாக, ''எல்லாரும் கை தட்டுங்க ஸார்!'' என்றார்.

பத்மா நம்பமுடியாமல் ஆச்சரியத்துடன் தன் கணவனைப் பார்த்தாள்.

ஆர்ப்பாட்டமான கைத் தட்டல் ஒலி அடங்கியதும், ''சிவநேசன்! கொஞ்சம் வாங்க. உங்க மனைவி என்ன கேட்டாங்க? என் கணவர் சிரிச்ச முகத்தைப் பார்த்தே ரொம்ப வருஷம் ஆச்சுன்னாங்க. அவங்க கிட்ட போய் ஐ லவ் யூன்னு சொல்லிச் சிரிங்க ஸார்.''

சிவநேசன் இறங்கி வந்து தன் மனைவி பத்மாவை நெருங்கி, கை குலுக்கி புன்னகையுடன், ''ஐ லவ் யூ பத்மா! ஐ'ம் ஸாரி!'' என்று சொல்ல, மீண்டும் அரங்கம் அதிர்ந்தது.

மூன்று கேமராக்களும் சுழற்சியை நிறுத்தின.

## "கல்யாணமாகி பத்து வருஷம் ஆச்சு. உங்க மனைவிக்குப் பிடிச்ச உணவு எதுன்னு தெரியல"



**க**தவின் தட்டலிலேயே ஓர் ஆவேசம் இருந்தது. குழந்தையைத் தொட்டிலில் போட்டுவிட்டுப் போய்த் திறந்தாள் செல்வி. முழு போதையில் இருந்தான் ஜெயபால். உள்ளே நுழைந்ததும், அவள் கூந்தலைப் பிடித்து அறைந்தான்.

''என்னை அவமானப்படுத்தறதுக்காகவே திட்டம் போட்டு அந்த நிகழ்ச்சிக்குக் கூட்டிட்டுப் போன இல்ல...? ஆஃபீஸ்ல அத்தனை பேரும் மூஞ்சிக்கு நேரா கிண்டல் பண்றாங்கடி. தாம்பத்யம்னா என்னன்னு தெரியுமாடி உனக்கு?

நாலு சுவத்துக்குள்ள நடக்கறது வெளில போகக் கூடாதுடி. இன்னிக்கு நாடே பாத்துடுச்சே நம்ம குடும்பத்தோட லட்சணத்தை. காலைல எதிர்த்த வீட்டுக்காரன் என்னைப் பாத்துட்டுக் கமுக்கமா சிரிக்கிறான். எப்ப என்னை நீ பப்ளிக்கா அவமானப்படுத்திட்டியோ இனிமே உன்னோட வாழ முடியாது. குழந்தையைத் தூக்கிட்டு நடையைக் கட்டு. இன்னும் ஒரு நிமிஷம் இந்த வீட்ல நீ இருந்தேன்னா... போட்டுத் தள்ளிட்டு ஜெயிலுக்குப் போய்டுவேன். பொறப்படு...''

**"சரி, எனக்குக் கொடுக்காம மிச்சப்படுத்தின பணத்தை ஏதாவது பேங்க்ல சேர்த்து வெச்சிருக்காரான்னு கேளுங்க..."**

அவளை இழுத்து வந்து தெருவில் நிறுத்தி விட்டுக் கதவை அறைந்து சாத்தினான் ஜெயபால்.

பொங்கி வரும் கண்ணீருடன் போகும் திசை புரியாமல் தவித்து நின்றாள் செல்வி.

**'வா** மனம் விட்டுப் பேசலாம்' நிகழ்ச்சியின் தயாரிப்பாளர் மூர்த்தி, நிமிர்ந்தார். தலைகுனிந்து அமர்ந்திருக்கும் நிரஞ்சனைப் பார்த்தார். எழுந்தார். அருகில் வந்து அவர் தோளில் கை வைத்தார்.

''மனுஷத்தன்மையே இல்லாத, நியாயத்தை உணரத் தயாரா இல்லாத ஒரு ஜெயபால், தன் மனைவியைத் தள்ளி வெச்சுட்டான் அப்படின்றதுக்காக இந்த நிகழ்ச்சி தோத்துடுச்சுன்னு நினைக்கிறது தப்பு நிரஞ்சன். அன்னைக்கு மனசு மாறின சிவநேசன் மாதிரி நிகழ்ச்சியைப் பார்த்த எத்தனையோ ஆயிரம் சிவநேசன்கள் இருப்பாங்க. அவங்கள்லாம் உங்களுக்கு ஃபோன் பண்ணலை. உங்களுக்கு ஃபோன் பண்ணினது ஒரு செல்வி மட்டும் தான்.''

''இருந்தாலும் ஒரு பொண்ணோட வாழ்க்கை...''

''விதை வீரியமா இருந்தா மட்டும் போதாது. அது விளையறதுக்கு அது விழற மண்ணும் வீரியத்தோட இருக்கணும். ஜெயபால் ஒரு பாளை பூமி. ஒரு கவிதை சொல்லட்டுமா? ***'தக்கக்காடுகளை அழிக்கும்போது சில பறவைக் கூடுகளும் சேர்ந்தழிவது தவிர்க்க இயலாத தர்மம். தயங்கி நிற்பதே அதர்மம்.'*** நீங்க வேலையை விட்டுப் போறதுல எனக்குச் சம்மதமில்லை. யோசிச்சு முடிவெடுங்க.''

யோசனையுடன் பேப்பர் வெயிட்டை உருட்டினார் நிரஞ்சன்.

**''மீ**ண்டும் ஒரு 'வா, மனம் விட்டுப் பேசலாம்' நிகழ்ச்சியில் உங்களைச் சந்திப்பதில் மிகுந்த மகிழ்ச்சியுடன் உங்கள் அன்பு நிரஞ்சன்'' என்று தொகுப்பாளர் உற்சாகமாக ஆரம்பிக்க, அழகான அரங்கத்தில் எதிரெதிராக அமர்ந்திருந்த பெற்றோர்களும், குழந்தைகளும் அதே உற்சாகத்துடன் கை தட்டினார்கள். ●

## மேஷம்:

ரொம்பவும் அற்புதமான வாரம். நீண்ட கால வழக்கு வியாஜ்யம் வெற்றி பெறும். திருமணக் காரியம் கைகூடி வரும். உடல் நலத் தொல்லைகள் சீராகும். பண வசதி பெருகும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். உத்யோகத்தில் உயர்வு ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும்.

## ரிஷபம்:

பேச்சில் கவனம் தேவை. குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். கூட்டாளிகள் விட்டு விலகுவார்கள். உடல் நிலையில் கவனம் தேவை. வேலைப்பளு அதிகரிக்கும். பெண்கள் இல்லற வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. கடன் சுமை ஏறும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது.

## மிதுனம்:

விலகிப் போனவர்கள் விரும்பி வந்து சேருவார்கள். சுப காரியப் பேச்சுவார்த்தை பலிதமாகும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். கடன் தொல்லை தீரும். வேலையில் உயர்வு ஏற்படும். வரவேண்டிய நிலுவைகள் வந்து சேரும். தாயின் உடல்நிலை பாதிக்கும். குழந்தைகளால் மனசந்தோஷம் கிட்டும். மனக்கசப்பு விலகி உறவுகள் பலப்படும்.

## கடகம்:

எடுத்த காரியங்கள் அனைத்திலும் வெற்றி கிட்டும். எண்ணிய எண்ணங்கள் ஈடேறும். கல்வியில் அதிக மதிப்பெண்கள் பெறுவீர்கள். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். தடையின்றி எந்தக் காரியமும் இனிது நடக்கும். தந்தை வழியில் ஆதாயம் கிட்டும். வாக்குவன்மை மேல் ஓங்கும். திருமண முயற்சிகள் பலிதமாகும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். பணப் பிரச்னை தீரும்.

## சிம்மம்:

பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். சிலருக்கு வீடு விற்பனை ஆகும். நெருங்கிய நண்பர்களை விட்டுப் பிரிய நேரிடும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். பணம் பல வழியில் வந்து பாக்கெட்டை நிரப்பும். மன சஞ்சலம் தீரும். வாகன சௌக்கியம் உண்டாகும்.

## கன்னி:

மறைமுக எதிர்ப்புகள் நிறைந்து இருக்கும். ஆரோக்கியம் பாதிக்காது. கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. வேலை மாற்றம் ஏற்படும். தாயின் உடல்நிலை பாதிக்கும். வீடு மாற்றம் ஏற்படும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். கடன் தொல்லை தீரும்.

## துலாம்:

மன நிறைவான வாரம். திருமணப் பேச்சுவார்த்தைகள் பலன் அளிக்கும். குழந்தைகளால் மன சந்தோஷம் ஏற்படும். புதிய வீடு மனை வாங்க உகந்த காலம். கடன் பிரச்னை தீரும். கல்விவளம் மேலோங்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. சுபச் செலவு ஏற்படும். மகான்களின் தரிசனம் கிட்டும். தூரதேச அழைப்பு வந்து சேரும்.

## விருச்சிகம்:

எதிலும் நிதானத்துடன் செயல்படுவது நல்லது. படிப்பில் அக்கறை எடுத்துப் படிக்கவும். கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. நீண்ட காலம் முடிவு பெறாமல் இருந்து வந்த சிக்கல் தீரும். குடும்ப வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. பண விவகாரத்தில் எச்சரிக்கை தேவை.

### தனுசு:

மனக்குழப்பம் தீரும். திருமணத் தடை விலகும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். பணவசதி பெருகும். இல்லற வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. கடன் சுமை தீரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலைப் பளு அதிகரிக்கும்.

### மகரம்:

வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். பணவசதி பெருகும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். தெய்வ அனுகூலம் சித்திக்கும். புண்ணிய ஸ்தலங்கள் சென்று வருவீர்கள். கல்வி வளம் மேலோங்கும். குடும்ப வாழ்வு மகிழ்ச்சிகரமானதாக அமையும். தீராத வழக்கு பிரச்னைகளுக்குத் தீர்வு கிடைக்கும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும்.

### கும்பம்:

மனத்தில் ஒருவிதமான பயம் ஏற்படும். எதற்கும் கவலைப்படாமல் இருப்பது நல்லது. தினமும் தியானம் செய்து வருதல் நலம். மனக்குழப்பம் தீரும். கடன் தொல்லை தீரும். பிரிந்து வாழ்ந்து வந்த குடும்பம் ஒன்று சேரும். குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சி கைகூடும். பூர்வீகச் சொத்துக்கள் பாகப்பிரிவினை ஆகும்.

### மீனம்:

மனநிறைவான வாரம். எண்ணங்கள் யாவும் ஈடேறும். தொட்டது துலங்கும். கல்வி வளம் மேல் ஓங்கும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். மனபயம் விலகும். வீடு கட்டும் பேறு வந்து சேரும். பிரார்த்தனை நிறைவேறும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். ○





''ஜோசியரே! நான் எம்.பி. ஆக வாய்ப்பு உண்டா?''

''உங்க ஜாதகப்படி அமளி நடக்கற இடத்துல நீங்க இருப்பீங்க!''

- அம்பை தேவா



''உனக்குத்தான் கை கால் நல்லா இருக்கே... ஏன் பிச்சை எடுக்கற..?''

''யார் சாமி சொன்னது! எனக்குக் கைல நகச்சுத்தி இருக்கு; கால்ல ஆணி இருக்கு.''

- வி.சாரதி டேச்சு

# ''ஓவர் ஆக்டிங்



''மேனேஜர் லீவ் முடிஞ்சு வர்ற வரை, நான்தான் ஆக்டிங் மேனேஜர்.''

''சரி சரி, ஓவர் ஆக்டிங் பண்ணாம அடக்கிவாசி.''

- சென்னிமலை
சி.பி.செந்தில்குமார்

''நம்ம ராமசாமி ஆஃபீஸ்ல இருக்கற இடம் தெரியாது!''

''அப்புறம் எப்படி கண்டு பிடிப்பீங்க?''

''குறட்டைச் சத்தத்தை வெச்சுத் தான்!''

- அம்பை தேவா





# பண்ணாதே!''

''எக்ஸிபிஷனுக்கு உள்ளே செல்லக் கட்டணம் இல்லையா?''

''ஆமா... ஆனா உள்ளேயிருந்து வெளியே வரக் கட்டணம் உண்டு!''

– எம்.அசோக்ராஜா

''ஒரு மணி நேரத்துக்கு முன்னாடி கொண்டு வந்திருந்தா, பிழைக்க வெச்சிருக்கலாமே!''

''என்ன டாக்டர் நீங்க, விஷம் குடிச்சே பத்து நிமிஷம்தான் ஆகுது...''

- சிக்ஸ் முகம்





# இவங்க இப்படித்தாங்க... 5

அப்போதெல்லாம் நான் சைக்கிளில் கோலிவுட்டை வலம் வந்த நேரம் (அதுவும் லேடீஸ் சைக்கிளில்தான்). ஒருநாள் மதியம் நாகேஷ் தியேட்டரைக் கடந்து வந்துகொண்டிருந்தபோது குறுக்கே ஒரு கார் வந்து நின்றது. திடுக்கிட்டுப் பார்த்தால் நெப்போலியன்.

''யோவ் சபீதா! ஃபோன் வந்திருக்கய்யா, நம்பர் எழுதிக்கோ'' என்று காருக்குள்ளிருந்து குரல் கொடுத்தார். அருகில் சென்று குறித்துக்கொண்டேன்.

''ஃபோன் பண்ணிட்டு வா பேசுவோம்'' என்றார்.

''சரி தலைவா'' - என்றேன்.

பாரதிராஜாவின் 'புதுநெல்லு புது நாத்து' படத்தின் வாயிலாக அறிமுகமான குமரேசன் என்கிற நெப்போலியன், ஓரிரு படங்களில் இரண்டாம் நாயகனாக நடித்துக் கொண்டிருந்த நேரம் அது. வில்லனாக அறிமுகமாகி, அடுத்தடுத்து இரண்டாம் நாயகன், கதாநாயகன், குணச்சித்திர நடிகர், நடிகர் சங்கச் செயலாளர், எம்.எல்.ஏ, எம்.பி என உயர்ந்தவர் நெப்போலியன். அவரைப் பல நேரங்களில் சந்தித்திருக்கிறேன்.

''என்ன தலைவா புதுசா செய்தியிருக்கா?''

''மலையாளத்துல ஒரு படம் பண்றேன்யா'' என்று அவர் நடித்து வந்த காட்சிகளையும், பேசிய வசனங்களையும் மலையாளத்திலேயே சொல்லிக் காட்டினார்.

''உங்க சினிமா வாழ்க்கையில் கோபம் கொள்ள வைத்த சம்பவம் எத்தனையோ இருக்கும். அதைச் சொல்லுங்க?''

''என் முதல் படத்துல நடிச்சுட்டு டப்பிங் பேசறதுக்காகப் போயிட்டிருந்தேன். அப்போ படத்தோட கட் அவுட் எல்லாம் வந்திருந்தது. ஆசையாய்ப் பார்க்கறேன். அதுல

எதுலேயும் என் படம் இல்லை. எனக்குப் பகீர்ன்னு இருந்தது.

அந்தக் கோபத்தோட டப்பிங் தியேட்டருக்குப் போனேன். கோபம் குழப்பமாக, தப்புத்தப்பா டப்பிங் பேசிக்கிட்டிருந்தேன். பாரதிராஜா கோபத்தோடு வந்தார். என் பின் தலையில் ஒரு தட்டுத் தட்டினார். அவ்ளோதான்... நான் அழுதுட்டேன். 'உனக்கு என்னாச்சு?'ன்னு கேட்டார்.



சொன்னேன்.

'இத பாருடா! உன் படம் கட் அவுட்ல வரலையேனு கவலைப்படாதே. மக்கள் மனசுல உன் படமும் பெயரும் வருதான்னு பார்த்துக்கோ... நாளைக்குப் போய்ப் பார்... உன்னோட கட் அவுட் இருக்கும்' என்று சொல்லி முதுகில் தட்டி அனுப்பினார்.

பிறகு நல்லா டப்பிங் பேசினேன். கோபம் வந்தால் குழப்பம் வரும். அதனால அன்னியிலிருந்து கோபத்தைக் குறைச்சுக்கணும்னு பார்க்கறேன்'' என்று சிரித்தார். இதே நெப்போலியன் என்னிடம் கோபத்தில் சீறிய சம்பவம் ஒன்றும் நடந்தது.



**ஒய்.**எம்.சி.ஏ கார்டனில் 'சிவன்' படப்பிடிப்பில் இருந்த ஸ்வாதியைப் பார்க்கப் போயிருந்தேன். 'முஸ்தபா' பட விமர்சனம்

# "எவன்யா விமர்சனம் எழுதினது?"

குமுதத்தில் வந்திருந்த நேரம் அது. நெப்போலியனிடம் மாட்டிக் கொண்டேன்.

'யோவ் சபீதா, இங்கே வாய்யா'' கோபமாகக் கூப்பிட,

## சபீதா ஜோசப்

அவர் பக்கம் போய் நின்றேன்.

''முஸ்தபா விமர்சனம் எவன்யா எழுதினது? அவன் மனசுல என்ன நெனைச்சிருக்கான்? பேனா வச்சிருந்தா அவன் பெரிய இவனா...? அவனவன் வீட்டை வித்து, காட்டை வித்து பொண்டாட்டி நகையை அடகு வச்சு, பத்து வட்டிக்குப் பணம் வாங்கி எடுக்கிறான். ஃபேனுக்குக் கீழே உட்கார்ந்து எழுதுறவங்களுக்கு அவனோட வலி வருத்தம்

தெரியுமா...?

'ஒசி டிக்கெட் கிடைச்சா இந்தப் படம் பார்க்கலாம்' அப்படீன்னு எழுதுறது நியா யமா? கொஞ்சமாவது மனசாட்சி வேண் டாம்?''

என்னை நிற்க வைத்து நெப்போலியன் கோபமாய் அர்ச்சனை செய்ய, யூனிட்டே என்னை முறைத்துப் பார்த்தது.

அந்த நேரம் பார்த்து ஸ்வாதியின் அம்மா, ''இந்த... அப்படிதான் என் மக ளைப் பத்தித் தப்பு தப்பா எழுதினாங்க...'' என்று எரிகிற நெருப்பில் நெய்யைத் தெளித்தார். நெப்போலியன் மறுபடியும் கோபமாய்ப் பேசினார்.



## "வரும்போது ஐஸ்கிரீம் வாங்கிட்டு வாங்க!"

''இப்ப ஆசிரியர் யாரு மாலனா... அவர் கிட்ட ஃபோன்ல பேசறேன்.'' நெப்போலி யன் இவ்வளவு சவுண்ட் கொடுத்துப் பேசியும் நான் மௌன சாமியாக நின்றிருந் தேன். சிறிது நேரத்தில் அமைதியானார். என் தோளில் கை போட்டு. ''சபீதா நீ கோவிச்சுக்காதே. உன் மேல எனக்கு எந்தக் கோபமும் இல்லே. நீ என்னோட நண் பன்யா.''

''சரி, தலைவா! உங்க கோபம் நியாய மானதுதான். அதைக் காட்டற விதம்தான் சரியில்லை. விமர்சனம் சரியில்லேன்னா மறுப்புக் கடிதம் கொடுங்க. அதுல உங்க உணர்வுகளை வெளிப்படுத்துங்க. அதை விட்டு யூனிட் மத்தியில் கத்தினால் சரியா... விமர்சனம் நானா எழுதுறேன்?'' என்றேன்.

நெப்போலியனின் ஆதங்கத்தை ஆசிரி யர் குழுவில் சொன்னேன். அது முதல் 'ஒசி டிக்கெட்' என்ற வாசகம் நீக்கப்பட்டது. விமர்சனப் போக்கும் சற்று மாறியது.

நெப்போலியன் முன்னணி கதா நாயகனானபோது அவருக்குத் திருச்சியில் திருமணம் நடந்தது; முதல்வர் கலைஞர் தலைமையில், இயக்குநர் பாரதிராஜா முன்னிலையில். தன்னுடைய திருமணத் துக்காக ஒரு பேருந்து ஏற்பாடு செய்து சினிமா பத்திரிகையாளர்களை அழைத்துச் சென்றார்.

நெப்போலியன் மறந்துபோன விஷயம் ஏதாவது உண்டா என்று அவரது மனைவி ஜெயசுதாவிடம் கேட்டபோது:

''உள்ளூர்ல ஷூட்டிங் நடந்தால் ஒவ்வொரு தடவையும் 'மறக்காம ஐஸ் கிரீம் வாங்கிட்டு வாங்க'ன்னு கிளம் பும்போது சொல்வேன். அவர் மறந்துட்டு வந்து முழிப்பார்.

ஒருநாள் காரை விட்டு இறங்கினவர், பாதி படிக்கட்டுல நின்னு பின்னாலே வந்த அவரோட தம்பிகிட்ட ''ஐஸ்கிரீம் வாங் கணும். ஞாபகப்படுத்துன்னு சொன்னதை மறந்துட்டியா'ன்னு கோவிச்சுக்கிட்டார். அப்புறம் கீழே போய் டிரைவரை விட்டு ஐஸ்கிரீம் வாங்கி வரச் செய்து, அப்புறம் அதை அவரே வாங்கிட்டு வந்த மாதிரி என் கையில் கொடுத்தார்.

இந்த டிராமாவெல்லாம் எனக்குத் தெரி யும்னு காட்டிக்காம சிரிச்சேன். அவரும் சிரிச்சுட்டார்'' என்கிறார்.

**(அடுத்த வாரம்: பிரபுதேவா)**

# நூல் அறிமுகம்




**தமிழ் பேசும் பகவத் கீதை - பசுபதி தனராஜ், மாதுஸ்ரீ இம்ப்ரிண்ட்ஸ், 6ஜி, புருஷோத்தமன் நகர், 2-வது பிரதான சாலை, குரோம்பேட்டை, சென்னை-44. விலை ரூ.180/-**

பகவத் கீதையின் பதினெட்டு அத்தியாயங்களும், எழுநூற்று நாற்பத்தைந்து சுலோகங்களும், எளிய தமிழில் விளக்கப்பட்டுள்ளன. ''செயலைத் துறப்பது, செயலைச் செய்வது - இந்த இரண்டுமே சொர்க்கத்துக்கு நம்மை இட்டுச் செல்லும். இந்த இரண்டிலும் செயலைச் செய்வதே சிறந்தது'' - இதுபோன்று சாரம் குன்றாமல், சொற்களைக் கோத்து அழகு நடையில் உரைக்கிறது நூல்.







**வெற்றி தரும் மந்திரம்! எஸ்.கே. முருகன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002. விலை ரூ.60/-**

## வீழ்ந்தே கிடப்பதுதான்தோல்வி!

பல தடைக்கற்களையும், தோல்விகளையும் சந்தித்து அவற்றை மோதி முன்னேறியவர்களே வரலாற்றில் வெற்றியாளர்களாய் அறியப்படுகிறார்கள். வெற்றிக்கு ஆதாரமாய் அவர்கள் கைக்கொண்ட மந்திர வாக்கியங்களின் தொகுப்பு இந்நூல். கண் பார்வையற்ற ஹெலன் கெல்லர் வாழ்க்கை தரும் பாடம் 'கனவு காணுங்கள்; வெற்றி உங்களுக்கே!' 'வீழ்வதல்ல... வீழ்ந்தே கிடப்பதுதான் தோல்வி' என்கிறார் லிங்கன். இன்னும் அறிந்துகொள்ள இந்நூலில் வழிகாட்டுகிறார்கள் சாதனையாளர்கள்.

**மௌனம் (பாபாஜியின் சரிதை) கே.எஸ். நாகராஜன் ராஜா, கிரி டிரேடிங் ஏஜென்ஸி பிரைவேட் லிமிடெட், 14, கபாலீஸ்வரர் சன்னிதி தெரு, மயிலாப்பூர், சென்னை - 600 004. விலை ரூ.90/-**

பாரத பூமியில் ஆன்மிக நெறியில் வழிகாட்டத் தோன்றிய அவதாரங்களாகப் பலர் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளார்கள். பாபாஜி வாழ்ந்ததாகக் கூறப்படும் இமயமலைப் பகுதிகளில் யாத்திரை செய்த ஆசிரியரின் அனுபவங்களும், பாபாஜி குறித்து அவர் பலர் வாயிலாகக் கேட்டறிந்த செய்திகளும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. இறையுணர்வு ஆன்ம அனுபவம் என்பதை உணர்த்தும் ஞான மொழிகள் ஒரு அத்தியாயமாக இடம் பெற்றிருப்பது சிறப்பு.

**- நேயமுகில்**

# நிஜம் நிழல் வேறு!

நேரில் பார்ப்பதற்கு பரமசாதுவாக அமுல் பேபி போல இருக்கிறார். 'உன்னைப் போல் ஒருவனி'ல் முரட்டு போலீஸ் அதிகாரியாக வந்து பயமுறுத்திய கணேஷ் வெங்கட்ராமன். ''இப்படி ஒரு லுக்கை வெச்சுக்கிட்டு எப்படி சார் அவ்வளவு முரட்டுத்தனமா நடிச்சீங்க?'' என்று கேட்டால், ''கேரக்டரை சரியா புரிஞ்சுக்கிட்டா நம்ம தோற்றத்துக்கு நேர் எதிரான கேரக்டரில்கூட நடிக்க முடியும். நான் சினிமாவுக்கு வர்றதுக்கு முன்னாடி மும்பை நேஷனல் ஸ்கூல் ஆஃப் டிராமாவில் நாடகங்களில் நடிச்சிருக்கேன். நிறைய மாடலிங் பண்ணியிருக்கேன். இதனால் நான் சந்திக்கும் மனிதர்களை உற்றுநோக்கும் திறமை இருந்தது. இதுதான் 'உன்னைப் போல் ஒருவனி'ல் சிறப்பாக நடிக்க உதவி செய்தது'' என்கிறார்.

***சினிமாவுல தவறைத் தட்டிக் கேட்கற கேரக்டரில் வர்றீங்களே... நிஜத்தில் நீங்க எப்படி?***

''சினிமாங்கற நிழல் வேற. யதார்த்தம்ங்கற நிஜம் வேற. சினிமால செய்றதையெல்லாம் நடைமுறை வாழ்க்கையில் செய்ய முடியாது. உன்னைப் போல் ஒருவன் ஆரிஸ்கான் போன்று இல்லாமல் ரியல் லைஃபில் நான் ரொம்ப சாத்வீகமானவன். கண்ணெதிரில் நடக்கும்



பிரச்னைகளை சாத்விகமான முறையிலேயே எதிர்கொண்டு ஆறாவது அறிவைப் பயன்படுத்தித்தான் முறியடிப்பேன்.''

***கோடம்பாக்கம் போட்டியில் ஜெயிப்போம் என்று நம்பிக்கை இருக்கிறதா?***

''தமிழ் ரசிகர்கள் நல்ல விஷயங்களுக்கு ஆதரவு கொடுப்பாங்கங்கற நம்பிக்கை இருக்கு. எதிர்காலத்தில் நல்ல டைரக்டரும், எனக்கு ஏற்றாற்போல கேரக்டர்களும் கிடைத்தால் தொடர்ந்து ஜெயிப்பது உறுதி.''

***நேட்டிவ் முகங்கள் வெற்றி பெறும் இன்றைய தமிழ் சினிமா சூழலில் உங்களைப் போன்ற வட இந்திய முகங்கள் வெற்றி பெற முடியுமா?***

''மீசையை எடுப்பது, வைப்பது என்பதெல்லாம் நடிப்பு கிடையாது. நமக்குக் கொடுக்கப்பட்ட கேரக்டரில் நாம் சரியா ஃபிட் ஆனா வெற்றிதான். உன்னைப் போல் ஒருவன், மண்ணின் கலாசாரத்தைப் பிரதிபலிக்கும் படம் கிடையாது. இன்டலக்சுவல் படத்தையும் சரியாகக் கொடுத்தால் ரசிகர்கள் வரவேற்பார்கள்''



**"சினிமாவில் செய்யறது எல்லாம் நடைமுறைக்கு ஒத்து வராது!"**

***மும்பை, சென்னை - எது உங்கள் சாய்ஸ்?***

''கலைஞன், பயணி போன்றவன். எந்த இடத்தில் தேவையானது கிடைக்கிறதோ அங்கே டெண்ட் போட வேண்டியதுதான். நான் பிறந்து வளர்ந்ததெல்லாம் மும்பையாக இருந்தாலும் என் அப்பா, அம்மா தமிழ்நாடுதான். வீட்டில் தமிழ்க் கலாசாரத்தோடதான் வளர்ந்தேன். சென்னை என் வீட்டுக் கலாசாரத்தோடு ஒத்துப்போவதால் சென்னையில் வசிப்பது, வீட்டில் வசிப்பதுபோல உள்ளது. என் திறமையை வெளிச்சம் போட்டுக் காட்டியது கோடம்பாக்கம்தான். எனவே இனி எப்போதும் தமிழ் மற்றும் தெலுங்கு சினிமாதான் என்னுடைய சாய்ஸ்.''

***உங்கள் வருங்கால மனைவி பற்றி...?***

''இந்தக் கேள்விக்குப் பதில் சொல்றது கஷ்டம் பிரதர்... அழகு என்பதையும் தாண்டி சரியான புரிதல்களுடனும் என் தொழிலை நேசிப்பவராகவும் என் மனைவி அமைய வேண்டும் என்பதே என் விருப்பம்.''

**- ராகவ்குமார்**

# மெல்லத் தமிழ் இனி வளரும்!




சரஸ்வதி, ஈஸ்வரி, மீனா, சிவகாமி, கலைமணி, தேன்மொழி... என்ன ஸார் இது ஹைதர்காலத்து பேருன்னு கேட்காதீங்க!

ஆங்கில மோகத்திலும் சமஸ்கிருத ப்ரியத்திலும் தமிழ்ப் பெயரைத் துறக்கும் சூழலில்... இந்தச் சீனர்கள் தமிழ் மீதான காதலால் வைத்துக் கொண்ட பெயர்கள் இவை.

பெயரில் மட்டுமல்லாது தமிழை முறையாகப் பயின்று, தமிழ் பேசி, சீன வானொலியில் தமிழ் நிகழ்ச்சிகளை அளிக்கும் தொகுப்பாளர்கள்.

''நான்கு ஆண்டுகளில் தமிழ் மொழியைக் கற்று, பணியில் சேர்ந்தேன். எனக்குப் பிடித்தவர் தெய்வப் புலவர்தான். (யாருன்னு தெரியுதா?) 'நன்றி மறப்பது நன்றன்று - நன்றல்லது அன்றே மறப்பது நன்று' இந்தக் குறளை நம்மோட ஒவ்வொரு வளர்ச்சியிலும் நினைத்துக் கொள்ள வேண்டும்'' என்கிறார் சேச்சியாங் மாநிலத்தைச் சேர்ந்த சரஸ்வதி.

அறிவிப்பாளர்களாக விளங்கும் இந்த வானொலி நேயர்களுக்காக சீனத் தமிழொலி என்ற இதழும் வெளி வருகிறது. ''எங்களின் நாற்பத்தைந்தாவது நிறைவு நாளில் நெஞ்சார்ந்த மகிழ்ச்சியை நேயர்களுக்கு நேர்த்திக் கடனாக்குகிறோம்'' என்று பெய்ஜிங் மாநில தேன்மொழி சொன்னபோது, மெல்ல தமிழ் இனி வளரும் என்ற நம்பிக்கை நாற்று துளிர்விடத் தொடங்கியது.

- அமிர்தா

# திருவல்லிக்கேணி, தடம் எண் 13..!

அவனை அந்த இடத்தில் பார்த்த போது என்னால் நம்பவே முடியவில்லை. ஓர் இடம் ஒரு மனிதனின் வாழ்க்கையை இவ்வளவு ஆக்கிரமிக்குமா? என்னால் நம்பவே முடியவில்லை.

அவன் பரணி. பரணீதரன். அவனை நான் முதலில் சந்தித்தது ஆறாம் வகுப்பு படிக்கிறபோதுதான். அதுவும் பொள்ளாச்சி பஸ் ஸ்டாண்டில் வைத்துத்தான். என்னை பஸ் ஏற்றி ஸ்கூலுக்கு அனுப்ப எங்கள் அம்மா பஸ் ஸ்டாண்ட் வந்திருந்தார். அம்மாதான் அவனிடம் முதலில் பேச்சுக் கொடுத்தார்.

''ஏன் கண்ணு நீயும் மகாலிங்கபுர பள்ளிக்கோடத்துக்குத்தான் போறியா?'' என்றார்.

ஆமாம்ங்கிறமாதிரி தலையை மட்டும் ஆட்டினான்.

''விக்னேஷையும் கூட கூட்டிட்டுப் போறியா... கண்ணு?'' என்றார் அம்மா.

பரணி அதற்கும் சரி என்கிற மாதிரி தலையை ஆட்டினான்.

அடுத்த ஐந்து நிமிடத்தில் எங்கள் பஸ் வந்தது. பரணி சொல்லாமல் கொள்ளாமல் திடீரென ஓடினான். கண்டக்டர் திட்டத் திட்ட மின்னல் வேகத்தில் அந்த பஸ்ஸில் ஏறினான். எனக்கு ஒன்றும் புரியவில்லை. ''அடப்பாவி இப்படி விட்டுட்டுப் போயிட்டானே'' என்று நினைத்தபடி கடைசியாய் பஸ்ஸில் ஏறினேன். உள்ளே போக அவன் பின்னால் என் சட்டையைப் பிடித்து இழுத்தான். ஸ்கூல் பையை வைத்து எனக்காகவும் ஓர் இடம் போட்டி ருந்தான். அப்படித்தான் பரணி என் நெஞ்சில் இடம் பிடித்தான்.

அதற்குப் பிறகு ஒவ்வொரு நாளும் பஸ் ஸ்டாண்டில் எனக்காக அவன் காத்திருப்பான். ஒவ்வொரு நாளும் ஓடிப்போய் பஸ்ஸில் எனக்காகவும் இடம்பிடித்தான். போகிறபோது பஸ் டிரைவரிடம் தயக்கமின்றி அரட்டை அடிப்பான். பிடித்த பாடல் போடச் சொல்லுவான். அவன் ஒரு நாள் வராவிட்டாலும் கண்டக்டர் என்னிடம் விசாரிப்பார்.

பரணிக்குப் படிப்பில் அவ்வளவு ஆர்வம் இருந்ததில்லை. ஒவ்வொரு வருஷமும் அவன் தேறும்போது அவனைவிட எங்க வாத்தியார் அதிகம் ஆச்சர்யப்படுவார். விதிவிலக்கில் தப்பித்துக் கொண்டிருந்தான்.

பத்தாம் வகுப்பு வரும்போது பரணி ஆளே மாறிப் போனான். லேசாய் மீசை முளைத்திருந்தது. பேச்சில் தொனி மாறியிருந்தது. தலைமுடியைப் பெரிதாய் வளர்த்து, பின்புற பேண்ட் பாக்கெட்டில் சீப்பு வைத்திருந்தான். அவனுக்கென ஒரு குரூப், பஸ் ஸ்டாண்டில் காத்திருக்கும். அவனைவிட வயதில் மூத்த பையன்கள் அவனுக்கு நட்பாயிருந்தார்கள். என்னை



முதலில் பஸ்ஸில் அனுப்பிவிட்டுப் பிறகு வருகிறேன் என்பான். கொஞ்ச நாள் எனக்குக் காரணம் புரியவில்லை. ராஜேஷ்தான் சொன்னான்.

''அவன் கேர்ள்ஸ் ஹைஸ்கூல் பொண்ணுகளை சைட் அடிச்சிட்டு அப்புறம்தான் பஸ் ஏறுவான். அது மட்டு மில்ல அவன் தம்மெல்லாம் அடிக்கறான்டா...'' என்றான்.

ஒரு நாள் பஸ்ஸுக்குக் காத்திருக்க, திடீரென இரண்டு போலீஸ்காரர்கள் எங்களைக் கம்பு எடுத்துக் கொண்டு துரத்த ஆரம்பித்தார்கள். நாங்கள் என்னவெனப் புரியாமல் ஆளுக்கொரு திசையில் தலைதெறிக்க ஓடினோம். பரணி ஒரு டீக்கடைக்குள் ஓடி மறைந்தான். நான் பஸ் ஸ்டாண்டின் சைக்கிள் ஸ்டாண்டில் நுழைந்தேன். சுவர் ஏறிக் குதித்து ஓடினேன். கை கால்களில் சிராய்ப்புகளின் எரிச்சல். ராஜேஷ் மூச்சிறைக்க கொஞ்ச தூரத்தில் என்னுடன் வந்து இணைந்து கொண்டான். எனக்கு ஆறுதலாயிருந்தது. அவன்தான் போலீஸ் துரத்திய காரணத்தைச் சொன்னான்.

## சரசுராம்

''பரணி குரூப்பெல்லாம் ஸ்கூல் புள்ளைகளை சைட் அடிச்சுக் கலாட்டா பண்றதை யாரோ போலீஸ்ல புகார் கொடுத்துட்டாங்களாம். அதான் எல்லாத்தையும் விரட்ட றாங்க...'' என்றான்.

இந்த விஷயம் வீட்டுக்குத் தெரிய, அம்மா என்னைத் துரத்தித் துரத்தி அடித்தார். இதுக்கு போலீஸ்கிட்டயே அடி வாங்கியிருக்கலாம். அவ்வளவு அடி.



அதற்குப் பிறகு நான் பரணியுடன் பேசுவதைக் குறைத்துக் கொண்டேன். பஸ்ஸில் கூடப் போவதையும் நிறுத்திக் கொண்டேன். எப்போதாவது பேசுவேன். அதற்குப் பிறகும் அவனிடம் பெரிய மாற்றம் தெரியவில்லை. அவன் எப் போதும் போல் பஸ் ஸ்டாண்டில்தான் நின்றிருந்தான். நான் கையை மட்டும் காட்டிவிட்டு நகர்ந்து கொள்வேன். எப் போதாவது நிற்க நேர்ந்தாலும் கொஞ்சம் தள்ளியே நின்று கொள்வேன். அவ்வப் போது அவனைக் கவனிப்பேன். பஸ் ஸ்டாண்டின் அத்தனை விஷயங்களும் அவனுக்கு அத்துப்படியாய் இருந்தன. எந்த ஊருக்கு என்ன பஸ் என்பதை யெல்லாம் விசாரிப்பவர்களுக்கு மிகச் சரியாகச் சொல்லுவான். 'அது எத்தனை மணிக்கு வரும்? எத்தனை மணிக்குக் கிளம்பும்?' என்பதுகூட அவனுக்கு மனப் பாடம்.

''இந்த ஞாபக சக்தி அவன் படிப்பில் இருந்திருந்தா அவன்தான்டா நம்ம ஸ்கூல் ஃபர்ஸ்ட்...'' என்பான் ராஜேஷ்.

''ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு விஷ யத்துல டேலன்ட்டா இருப்பாங்க. அவன் இந்த விஷயத்தில் டேலன்ட்...'' என்றேன்.

''என்ன டேலன்ட்? பிரயோஜனமில் லாத டேலன்ட்... எப்பப் பார்த்தாலும் பஸ் ஸ்டாண்டில் இருந்துட்டு... பஸ் ஸ்டாண்ட் பரணின்னு பேரே வாங்கிட்டான். என்ன ஆகப் போறானோ தெரியல...''

ராஜேஷ் எப்போதும் வருத்தப்படு வான். எனக்கும் பரணி மேல் அந்த வருத்தம் உண்டு. ஒரு முறை அவனிடம் பேசிப் பார்த்தேன்.

''டேய்... பஸ் ஸ்டாண்ட் பத்தி உனக்கென்ன தெரியும்? இவ்வளவு சுவாரஸ்யமான இடம் வேற எதுவுமே இல்லடா! நின்னு பாரு. எவ்வளவு மனுஷங்க இங்க வந்து போறாங்க தெரியுமா? கலைடாஸ்கோப்பில் பார்க்கிற மாதிரி காட்சிகள் மாறிட்டே இருக்கும். போரே அடிக்காது... விக்னேஷ்!'' என்றான்.

**ப்**ளஸ் டூ படிக்கிறபோது அவனிடம் மாற்றம் தெரிந்தது. பரணி காதலிக்க ஆரம் பித்திருந்தான்.

அவன் காதலிக்கும் அந்த பெண்ணின் பெயர் மீனா என்றான். அவளை உயிருக்கு உயிராய்க் காதலிப்பதாய்ச் சொன்னான். ஏதோவொரு கம்பெனியில் வேலை பார்க்கிறாளாம். பஸ் ஸ்டாண்டில் வைத் துத்தான் அவளை முதலில் பார்த்தானாம். முதல் பார்வையிலேயே இருவருக்கும் காதல் பத்திக் கொண்டதாம். ஒருமுறை பரணி என்னிடம் சொன்னான். எனக்குக் கோபம் கோபமாய் வந்தது. ''வேண்டாம் பரணி. ப்ளஸ் டூ படிச்சு பாஸ் பண்ற வேலையைப் பாரு'' என்றேன். ஆனால் காதல் அவனது காதை அடைத்துக் கொண்டிருந்தது.

அந்தப் பெண்ணுக்காக நேரத்திலேயே போய் பஸ் ஸ்டாண்டில் காத்திருப்பான். அவளுடன் ஒரு கடை சந்தில் நின்று பேசு வான். பிறகு அவளை பஸ் ஏற்றி விடு வான். கை அசைப்பான். கண் கலங்கி நிற்பான். அவள் சாயந்திரம் பஸ்ஸில்

**"பயணிகள் கவனத்துக்கு... திருவல்லிக்கேணி வரை செல்லும் தடம் எண் 13 பணிமனை வாயிலிலிருந்து இன்னும் சற்று நேரத்தில் புறப்படும்..."**

திரும்பி வருவாள். மீண்டும் இருவரும் அதே சந்தில் நின்று பேசிக் கொண்டிருப்பார்கள். இது பள்ளிக்கூடம் முழுவதும் தெரிந்த காதல் கதை. நான் எதையும் கண்டுகொள்வதில்லை. எனக்குப் படிக்க நிறைய இருந்தது.

ஒரு நாள் பஸ் ஸ்டாண்ட் மூலையில் நின்று பரணி என்னிடம் கதறி அழுதான். காரணம் கேட்டேன். அவள் சொல்லாமல் கொள்ளாமல் திடீரென கல்யாணம் செய்து கொண்டாளாம். தன் கணவனோடு இதே பஸ் ஸ்டாண்டில் ஊட்டி பஸ்ஸில் ஏறி டாட்டா காட்டிவிட்டுப் போனாளாம். பரணி, ''இதைத் தாங்க முடியலை. தற்கொலை செய்யப் போறேன்'' என்றான். நான் அவனது முதுகில் தட்டிக் கொடுத்து, ''உளறாம பரீட்சைக்கு ஒழுங்கா படி'' என்றேன். அவன் தொடர்ந்து அழுது கொண்டிருந்தான்.

எல்லோரும் எதிர்பார்த்தபடி பரணி ப்ளஸ் டூவில் தேறவில்லை. மூன்று பாடத்தில் அவனுக்குப் போயிருந்தது. அதற்குப் பிறகு என் வாழ்க்கையில் யாரையும் திரும்பிப் பார்க்கக்கூட நேரமில்லாமல் நிறைய மாற்றங்கள் நடந்தன. எங்கள் வீடு சேலம் போனது. அங்கே தான் என் மேல் படிப்பெல்லாம் முடிந்தது. பிறகு ஒரு தனியார் வங்கியில் எனக்குக் கிடைத்த வேலை. அதன் பிறகு மும்பையில் இரண்டு வருஷம், விசாகப்பட்டினத்தில் மூன்று வருஷம் என வருடங்கள் ஓடின. ராஜேஷ் திருச்சியில் படித்து ஒரு பெரிய வேலையில் இருந்தான். பரணியைப் பற்றி எப்போதாவது தகவல் வரும். அவன் தபால் மூலம் பட்டப் படிப்பு படிக்கிறானாம். அதற்குப் பிறகு அவன் திருப்பூர் பனியன் கம்பெனியில் வேலை பார்ப்பதாகவும் செய்தி கேட்டேன். இதுதான் நான் பரணியைப் பற்றிக் கேட்ட கடைசித் தகவல். அதற்கு பிறகு யார் என்ன ஆனார்கள் என்று தெரியாமல் வாழ்க்கை ஓடியது. பின் எனக்கு நடந்த கல்யாணம், பிறந்த இரண்டு குழந்தைகள் என இருபது வருடங்கள் போனதே தெரியவில்லை. என் வங்கியில் மாற்றல் ஆகி சென்னை வந்தேன்.

சென்னைக்கு வந்ததும் குடும்பத்தோடு மகாபலிபுரம் போக தி.நகர் பஸ் ஸ்டாண்டில் நின்றிருந்தேன். பஸ் எத்தனை மணிக்கென என் மனைவி விசாரித்து வரச் சொன்னாள். நான் டைம் கீப்பர் அறைக்குப் போனேன். அங்கே பார்த்த காட்சியைத்தான் என்னால் நம்பவே முடியவில்லை. உள்ளே பரணிதான் உட்கார்ந்திருந்தான். அவன் முன்னால் ஒரு மைக் இருந்தது.

''பயணிகள் கவனத்துக்கு... திருவல்லிக்கேணி வரை செல்லும் தடம் எண் 13, பணிமனை வாயிலிலிருந்து இன்னும் சற்று நேரத்தில் புறப்படும்...'' என்ற அவனது குரல் அந்த பஸ் ஸ்டாண்ட் முழுவதும் ஒலித்துக் கொண்டிருந்தது.



# வண்ணத் தூரிகை

**சா**லை ஓரத்தில் ஓர் அழகான ஓடை. இரண்டு மூன்று நாளைக்கு முன்னால் நன்றாக மழை பெய்திருந்தபடியால், ஓடையில் நிரம்பத் தண்ணீர் இருந்தது. தெளிவான பளிங்கு போன்ற தண்ணீர்; சுற்றிலும் பசுமையான மரங்கள்; ஓங்கி வளர்ந்த மரங்கள் அல்ல; குட்டையான மரங்கள்தான். சற்று தூரத்தில் மரங்களுக்கு மேலே ஒரு பெரிய வீட்டின் மேல் பாகம் மட்டும் தெரிந்தது. பசுமையான மரங்களுக்கு மேலே தூய வெள்ளைச் சுண்ணாம்பு அடித்த சுவரும், அதன் மேலே சில ஓட்டுக் கூரையும், மேலே ஆகாசமும் ஒரு வர்ணக் காட்சி போல் புலப்பட்டன. நீரோடையின் ஒரு புறத்தில் இரண்டு வெண்ணிறக் கொக்குகள் ஒற்றைக் காலால் நின்று தவம் செய்த காட்சி அதைவிட அருமையாயிருந்தது.

மகுடபதி அந்த ஓடைக் காட்சியைக் கண்டு சிறிது நேரம் இன்புற எண்ணி, மிதிவண்டியிலிருந்து இறங்கினான். மிதி வண்டியை ஒரு மரத்தடியில் சாத்திவிட்டு, ஓடையில் தண்ணீர்க் கரைக்குச் சமீபமாய்ச் சென்றான். அப்படிப் போகும்போது சுற்றுமுற்றும் பார்க்கையில் அவனுடைய நெஞ்சை ஒரு கணம் ஓடாமல் நிறுத்திய



ஒரு காட்சி தென்பட்டது. ஒரு மரத்தடியில் ஓர் அழகிய இளம்பெண் படுத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய கண்கள் மூடியிருந்தன. அந்த நிலையில் அவளைப் பார்க்கும்போது சாதாரண மனிதப் பெண்ணாகத் தோன்றவில்லை. நிசப்தமான அந்த ஏகாந்தமான பிரதேசத்தில் - அந்த அழகிய ஓடைக்கரையில் - இந்த நேரத்தில் படுத்துத் தூங்குவது மனிதப் பெண்ணாயிருக்க முடியாது; வனதேவதையாகத்தானிருக்க வேண்டும்! - இப்படி எண்ணிய மகுடபதிக்குச் சட்டென்று இன்னொரு நினைவு உண்டாயிற்று. அவள் தூங்குகிறாளோ அல்லது ஏதாவது ஒரு காரணத்தினால் மூர்ச்சையாகித்தான் கிடக்கிறாளோ?- இவ்விதம் எண்ணியதும், அவன் விரைந்து சென்று அப்பெண்ணின் அருகில் நெருங்கினான். குனிந்து பார்த்தான். மூர்ச்சையாயிருக்கிறாளா, தூங்குகிறாளா என்று தெரிந்து கொள்ள வழி தெரியவில்லை. மூக்கின் அருகில் விரலை நீட்டியபோது, மிக மிக இலேசாக மூச்சு வருவது போல் தெரிந்தது. அதே சமயத்தில் அந்த முகத்தின் அழகும் அவன் கண்ணுக்குத் தெரியாமல் போக

வில்லை. மூடியிருந்த கண்கள் கூம்பிய நீலோற்பல மொட்டுக்களை அவனுக்கு ஞாபகப்படுத்தின. ஒரு கொகுத்தேனீ அம்முகத்தினருகில் வந்து அப்போது வட்டமிட்டது. ''இந்த முகத்தைத் தாமரை மலர் என்று எண்ணித்தான் இந்தத் தேனீ வட்டமிடுகிறது'' என்று நினைத்தான்.

வெறுமே இப்படிப்பட்ட வர்ணனைக் கற்பனைகளில் அவன் அதிக காலம் கடத்தி விடவில்லை. 'தூங்குகிறவளா யிருந்தால் இவ்வளவு சமீபத்தில் நாம் வந்து நிற்கும்போது விழித்துக் கொள்ளாமல் இருப்பாளா? மூர்ச்சையாகத்தான் இருக்க வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டு ஓடைக் கரைக்கு ஓடினான். கைக்குட்டையைத் தண்ணீரில் நனைத்து எடுத்துக் கொண்டு ஒரு நொடியில் ஓடி வந்தான். அந்தத் தண்ணீரைப் பிழிந்து முகத்தில் தெளித்தவுடனே, அவள் பளிச் சென்று எழுந்து உட்கார்ந்து முகத்தைத் துடைத்துக் கொண்டதோடல்லாமல், மகுடபதியைப் பார்த்துக் கலகலவென்று சிரிக்கவும் தொடங்கினாள்.

– 'மகுடபதி' புதினத்திலிருந்து...





# இருப்பின் வலி

எச்சில் இலையாய்க் கிழிந்து கிடக்கிறாள்
வெறுமையைத் தின்றபடி
வெற்றிடத்தை நிரப்பியபடி....

யாருமற்ற அறையின்
ஜன்னல்களிடம் பேசினபடி
கழியுதவள் மொழி....

கூட்டத்தில் பேசிய சத்தங்கள் மட்டும்
கேட்கிறது ஆட்களில்லாமல்....
யார்யாருக்கோ செய்த நன்றிகள்
எழுதிவைக்கப்படவில்லை யாரிடமும்..

ரொட்டித் துண்டுக்காய் ஏங்கின நாயிடம்
காட்டப்படுது கிழட்டு மூத்திரப் பை
வாடைகள் மட்டுமல்ல

காக்கைகள் கொண்டு சென்று
முற்றங்களில் கடாசது
துரோகங்களையும்..

## தமயந்தி கவிதைகள்

# பிடிமானம்

பூட்டிய வீட்டுக்குள் அலையும்
பூனையின் கால் தடங்களுக்குப்
பயங்கள் கிடையாது...
பேருந்திலிருந்து இறங்கும் வரை
விரல்கள் தவறவிடுவதில்லை
பயணச்சீட்டை...
மழை விடும் வரை
வெயிலை நினைத்துப் பார்க்காமல்
இருக்க முடிவதில்லை...
என்றாலும்...
யாருமற்று ராத்திரியின் நிசப்தத்தில்
தனியாகவே இருக்கிறார்
கருப்பண்ணசாமி மற்ற சாமி மாதிரியே...

தேன்மொழிக்குச் சட்டென வியர்ந்தது.

இது புதியது... இதற்கு முன் இப்படி ஓர் அனுபவம் வாய்த்ததில்லை. உதட்டை ஈரப்படுத்திக் கொண்டாள். முன்னால் நகர்ந்து கொண்டிருக்கும் கூட்டங்களினூடே அவள் பார்வை ஸ்டேஷன் வாசலைக் கூர்ந்தது. அங்கே கறுப்பு கோட்டு சகிதம் டிக்கெட் செக் பண்ணிக் கொண்டிருந்த இரண்டு டி.டி.ஆர்களைப் பார்த்ததும் கிட்டத்தட்ட அவளுக்கு ஜுரமே வந்துவிட்டது. ஸ்டேஷனில் பயணிகள் மற்றும் வியாபாரிகளின் இரைச்சல், ரயிலின் ஷட்டில் ஆகியவற்றின் சத்தம் வேறு அவளது டென்ஷன் டெசிபலை எகிற வைத்தது.

அவள் கண்களுக்கு இப்போது அந்த டி.டி.ஆர்கள் இருவரும் தலையில் கொம்பு முளைத்த எமகிங்கரர்களாகத் தெரிந்தனர். அவளையும் மீறி உடல் நடுங்க ஆரம்

அஜயன் பாலா

5

பித்தது.

என்ன செய்யலாம்?

கூட்டம் கலைந்தபிறகு நிதானமாக அவர்களிடம் நடந்த விஷயத்தைச் சொல்லிக் கல்யாணப் பத்திரிக்கையைக் காண்பித்து செண்டிமெண்டாகப் பேசி எஸ்கேப் ஆகலாம். அதுவரை பேசாமல் அப்படியே கொஞ்ச நேரம் உட்காரலாம் என முடிவெடுத்து, பெட்டியையும் நாற்காலியில் சாய்த்துவிட்டுத் தானும் அமர்ந்தாள். முட்டி வலித்தது; முழங்கால்களைப் பிடித்துக் கொண்டாள்.

அவசர அவசரமாக சிலர் தண்ணீர் பிடிக்க ஓடிக்கொண்டிருந்தனர். ஒவ்வொரு ரயில் ஜன்னலாக வியாபாரிகள் கூவிக்கூவி எதை எதையோ விற்றுக் கொண்டிருந்தனர்.

சட்டென ஞாபகம் வந்தவளாக அருகிலிருந்த லெதர்பேக்கின் ஜிப்பைத் திறந்து இன்விடேஷனை வெளியே எடுத்தாள்.

# பகல் மீன்கள்

அப்பாடா... இதுவாவது விட்டு வெச்சோமே என மனத்துக்குள் சொல்லிக் கொண்டவளாக அதனைக் கையில் கருட்டிக் கொண்டு கால்களை ஒன்றின் மேல் ஒன்றாகப் போட்டுக் கொண்டு கைகளை உயர்த்தி, சோம்பல் முறித்துக் கொட்

**அவன் ஓடிய வேகத்தில் ஒரு பெண்ணுக்கான பாதுகாப்பு இருப்பதை உணர்ந்தாள்**

டாவி விட்டபடி போலியான தைரியத்தை அவளாக வரவழைத்துக்கொண்டாள்.

சென்னையில் ஒரு கோடீஸ்வரி, விசாகப்பட்டினம் ரயில் நிலைய பிளாட்ஃபாரத்தில் வித் அவுட்...

நினைத்தபோது அவளுக்கே சிரிப்பாக இருந்தது.

அப்பாவுக்குத் தெரிந்தால் அவ்வளவுதான். முதலில் செகண்ட் கிளாஸில் ஏன் போனாய் என அதற்கே ஒரு பாட்டுப் பாடுவார்.

ஃபர்ஸ்ட் கிளாஸ் ஏசியில் எந்த த்ரில்லும் இல்லாமல் பயணிப்பதில் அவளுக்கு விருப்பமில்லை.

இந்த இக்கட்டான சமயத்தில் யாராவது ஒருவன் தன் பிரச்னையைப் புரிந்து ஆபத்பாந்தவனாக டி.டி.ஆரிடம் பர்ஸைத் திறந்து ஃபைனைக் கட்டி வெளியே அழைத்துச் சென்று, தன்னுடைய பைக்கில் ஏற்றிக் கொண்டு முன்பின் தெரியாத தெருக்களில் அலைந்து, வழியில் ஒரு பிட்ஸாவும் கோக்கும் வாங்கித் தந்து, கடைசியில் கல்யாணம் நடக்க இருக்கும் ஹோட்டலை அடைந்து கார்த்திகாவின் முன் கொண்டு போய் பைக்கை நிறுத்தினால் எப்படி இருக்கும்?

இப்படி நினைக்கும்போதே அவள் கண்முன்னே அவன் வந்து நின்றான். அவனேதான்.

அவளுக்கு அதிர்ச்சியாக இருந்தது. உண்மையில் இப்படி சம்பவத்தை அவள் கற்பனையில் யோசித்தபோது, அது யாராக இருந்தால் அல்லது யாரைப் போலிருந்தால் நன்றாக இருக்கும் என் அவளது உள் மனமே ஓர் ஆளை ஸ்கெட்ச் பண்ணிக் காண்பித்ததோ, அதே ஆள். காலை ரயில் அத்துவானக்காட்டில் நின்று கொண்டிருந்த போது பாட்டுகோஷ்டியில் கலக்கலாகப் பாடி அனைவரது மனத்தையும் கவர்ந்தவன். நீல நிற ஜீன்ஸ், கருட்டை முடி பார்ட்டி, கையில் ரெண்டு லிட்டர் அக்வா வாட்டர் பாட்டிலோடு யாரையோ, எதையோ தேடியவாறு நின்று கொண்டிருந்தான்.

எதையும் யோசிக்கவில்லை.

சட்டென நகர்ந்து கொண்டிருக்கும் கூட்டத்தில் புகுந்து அவன் முன் போய் நின்றாள். ஓரிரு நொடி தடுமாறியவன், தன்னைத்தான் பார்க்க வந்திருக்கிறாளா என சந்தேகத்துடன் சைகையால் கேட்டுப் புன்னகைத்தான். அவன் சிரித்தபோது அதுவரை தன்னைச் சூழ்ந்திருந்த பயமனைத்தும் ஒரு நொடியில் முழுதாக விலகியதைப் போல உணர்ந்தாள்.

''ஸார் ஒரு ஹெல்ப்...''

அவள் பேசத் தொடங்குவதற்குள் இரண்டொருவர் அவசரமாக அவர்களுக்கிடையே புகுந்து வெளியேறினர். ஒருவனது பை அவளது தோளை இடித்துத் தள்ளியது.

## அப்படியா?

**வ**ருகிறது... வருகிறது... என்று புலி கதையாக சொல்லிக்கொண்டிருந்த கேப்டன் டீ.வி. விரைவில் வரப்போவது நிஜம்தான். ''தங்கள் கருத்துகளைச் சொல்ல கட்சிகள் எல்லாம் டீ.வி. வைத்திருக்கும்போது, தனக்கும் அது அவசியம் என்ற முடிவுக்கு வந்துவிட்டார் கேப்டன். அதனால், ஒளிபரப்பைத் தொடங்கும்போதே முழுமையான வடிவத்துடன் வெளிவருவதற்கான பணிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.. அதற்கான தொடர்களும் தயாராகின்றன.



''இங்க வாங்க... கொஞ்சம் அப்படி நின்னு பேசலாம்.''

தன் லக்கேஜ் இருந்த இருக்கையருகே அவள் நகர்ந்தாள். அவனும் வந்தான். இங்கு தன் தோழியின் திருமணத்துக்கு வந்திருப்பதைக் கூறியவள், பின் காலையில் பாட்டுப் பாடிக் கொண்டிருந்த இடத்தில் பர்ஸ் தொலைந்து விட்டதையும், அதில்தான் ரிஸர்வேஷன் டிக்கெட், ஏ.டி.எம். கிரெடிட் கார்டுகள் சில ஆயிரங்கள் கேஷ் இருந்ததையும் கூறி ஒரு மாதிரியாகத் தடுமாறிக் குளறிப் பேசினாள்.





சட்டென அவன் முகமே மாறிவிட்டது. ''என்ன இவ் வளவு கேஷுவலா சொல் றீங்க. நம்ம கூட பாட்டுப் பாடினாங்களே அவங்ககிட்ட கேட்டீங்களா?''

அவன் கேள்வியில் லாஜிக் இருந்தது.

''இல்லை அவங்க யாராவது தப்பா எடுத்துக்குவாங்களோன்னு...''

''என்னங்க நீங்க பர்ஸைத் தொலைச் சிருக்கீங்க. இவ்வளவு பெரிய விஷயம். இதுல தப்பா எடுத்துக்கறதுக்கு என்ன இருக்கு. ஒரு வேளை அவங்ககிட்டயே கிடைச்சு யாருதுன்னு தெரியாம வெச்சிருந் திருக்கலாம் இல்லியா?''

என்ன பதில் சொல்வது எனத் தெரியா மல் தலைகுனிந்தாள்.

''ஒரு நிமிஷம். இங்கேயே நில்லுங்க நானே போய்க் கேட்டுப்பாக்கறேன்.''

அவசரமாக ஓடினான். ஓடிய வேகத்தி லேயே ஒவ்வொரு ஜன்னலாகப் பார்த்துக் கொண்டே ஓடினான்.

விசாகப்பட்டினத்தில் என்ஜின் மாற்ற வேண்டியிருந்ததால் இன்னும் குறைந்தது ஆறேழு நிமிடமாவது இங்கு நிற்கும். அதற்குள் எப்படியும் வந்துவிடு வான் என்று காத்திருந்தாள்.

அதுவரை இருந்த பயம் விலகினாலும் இப்போது பதற்றம் கூடியது. அவன் ஓடிய வேகத்தில் ஒரு பெண்ணுக்கான பாது காப்பு இருப்பதை உணர்ந்தாள். சட்டென மனத்தை அதற்கு மேல் ஓடவிடாமல், தனக்கு ஏற்பட்ட நெருக்கடியிலிருந்து விலகவேண்டும் என்பதை மட்டும் மனத்துக்குள் ஒரு வேண்டுதலாக வைத்துக் கொண்டாள். ஆனாலும் அவளையும் மீறி ஓர் ஆச்சர்யம், ஒரு வெள்ளை இறகாக அவள் முன் காற்றில் தவழ்ந்தது. யார் இவன்? எந்த ஊருக்குப் போகிறான்? கல்கத்தாவா? கேள்விகள்... கேள்விகள்... உடன் இன்னொரு சந்தோஷ உணர்ச்சியும் அந்தக் கேள்விகளுடன் ஒட்டிக்கொண்டி ருந்தது. அந்த உணர்ச்சிக்குக் காரணம் என்ன? துரிதமாக மனப்பதிவுகளை ஃப்ளாஷ்பேக்கில் ஓட்டியபோதுதான் உணர்ந்தாள். சற்றுமுன் யாரோ ஒரு ராஜ குமாரன் தன்னை இக்கட்டிலிருந்து காப்

## அப்படியா?

சூர்யாவின் 'ஆதவன்' தீபாவளிக்கு ரிலீஸ் ஆகிற நிலையில், விஜய்யின் 'வேட்டைக்கார'னையும் ரிலீஸ் பண்ண வேண்டாம் என்று சேனல் தரப்பு முடிவு செய்ததாம். அதல்ல விஷயம். இந்த தகவல் விஜய்க்கே சொல்லப்படவில்லையாம். தாமதமாகச் செய்தியை அறிந்த விஜய் மிகவும் அப்செட்டில் இருக்கிறார்.

பாற்றினால் எப்படியிருக்கும் என நினைத்து முடிப்பதற்குள் அவன் வந்து நின்ற அதிசயம்தான் அந்த மகிழ்ச்சிக்கான காரணம் என்பதை உணர்ந்தாள். எப்படி நாம் நினைத்தது போலவே நடக்கிறது? விஸ்காம் முடித்ததிலிருந்தே சினிமா டைரக்டராவது குறித்த லட்சியம் ஒன்று அவளை எப்போதும் அலைக்கழித்து வருவதுண்டு. அப்படிப் படமெடுத்தால் தன் இன்றைய அனுபவத்தையே அதில் காட்சியாகச் சித்திரிக்கலாம் என யோசித்தாள்.

யாரோ ஒரு ராஜகுமாரன் தன்னை இக்கட்டிலிருந்து காப்பாற்றினால் எப்படியிருக்கும்

ஓபனிங் ஸீனிலேயே ஹீரோயின் பர்ஸைத் தொலைத்துவிட்டு பிளாட்ஃபார நாற்காலியில் பெட்டி படுக்கையுடன் பரிதாபமாக அமர்ந்திருக்கிறாள். சட்டென பதற்றத்துடன் தன் கற்பனைக்குக் கடிவாளம் போட்டுக்கொண்டு அவன் போன திசையையே பார்த்தாள். இன்னும் வரவில்லை. தோ இந்த நிமிடம் வந்து விடுவான். அடுத்த நிமிடம்... அடுத்த நிமிடம்... ம்ம்ம்.. ஹூஹும்...

நேரம் கூடக் கூட, அவன் வராதது அவளுக்கு மீண்டும் பயத்தைக் கூட்டியது. புறப்படுவதற்கான ஆயத்தமாக ரயில் ஊளையிட்டது.

அப்போது கேட்ட ஸ்டேஷன் மாஸ்டரின் விசில் சத்தம் அவளுக்கு உயிரைப் பிடுங்கும் வலியை உண்டாக்கியது. யாரோ முதுகில் ஓங்கிக் குத்தியதைப் போல உணர்ந்தாள்.

வண்டி நகரத் தொடங்கியது. பயணிகள் ஒவ்வொரு பெட்டியின் வாசலிலும் முண்டிக் கொண்டிருந்தனர். இப்போது பிளாட்ஃபாரமே வழித்துவிட்டது போலிருந்தது. நீலம் மற்றும் சிவப்பு யூனிபார்ம் போட்ட ரயில் ஊழியர்கள் தவிர ஒருவருமில்லை.

பெரும் சோகம் மனத்தைக் கவ்வ, இனி என்ன செய்யலாம் என முடிவெடுக்க மனமில்லாதவளாய் வெறுமையுடன் லெதர் பேகை எடுத்துத் தோளில் மாட்டியவள், இடக்கையால் சக்கரம் வைத்த பெட்டியை இழுத்துக் கொண்டு என்ன நடக்கிறது பார்ப்போம் எனும் எண்ணத்துடன் வாசலை நோக்கி நகர...

ஆச்சர்யம்... இமைகள் விரிந்து கொண்டன. அவன்... முதுகுப் பக்கமாகச் சுமந்த ஒரு சிறிய பையுடன் டி.டி.ஆருடன் பேசியபடி இவளை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

இவளுக்கு மயிர்க்கால்கள் சிலிர்த்துக் கொண்டன.

அப்படியே மீண்டும் நாற்காலியில் பொத்தென அமர்ந்தவளின் கண்களில் இருந்து நீர் வழிய துடித்துக் கொண்டிருந்தது.

**(மீன்கள் துள்ளும்)**

"அடச்சே... கொஞ்சம் பேசாமத்தான் பாருங்களேன். மனுஷனை ஒரு ப்ரோக்ராம் நிம்மதியா பாக்க விடறீங்களா? எப்ப பார்த்தாலும் சளசளன்னு என்ன பேச்சு?'' தலையில் அடித்துக்கொண்டான் சந்திரன்.

கட்டுப்பட்டு நீடித்த அமைதி சில நிமிடங்களுக்கு மேல் தொடரவில்லை.

இது இனம், மொழி, நிறம் பாகுபாடின்றி உலகெங்கும் நடைபெறுவதுதான். ஒட்டுமொத்த ஆண் சமுதாயக் குற்றச்சாட்டே, பெண்கள் வாய் ஓயாமல் பேசிக் கொண்டே இருக்கிறார்கள் என்பதுதான்.

வாரியார் கூட சொல்லுவார், ''பெண் மணி அல்லவா அதுதான் ஒலித்துக் கொண்டே இருக்கிறது'' என்று!

ஏன் இப்படி? அறிவியல் ரீதியாகப் பார்க்கலாம்.

முதலில் மூளையின் அமைப்பை



# காலி பெட்டி Vs கல்லாப் பெட்டி!

5

டாக்டர்
ஏ.வி.ஸ்ரீனிவாசன்

ஆராய்ந்ததில், ஒரு பெண் பேசும்போது அவள் தன் மூளையின் இரு அறைக் கோளங்களிலிருந்தும் அதிகப் பகுதியை ஆக்டிவேட் செய்கிறாள் என்று தெரிய வந்தது. ஆனால் ஆண் இரு அறைக் கோளங்களிலிருந்தும் மிகச் சிறிய பகுதியையே உபயோகப்படுத்துகிறான்.

அதுமட்டுமின்றி, ஆதி காலம் முதல் ஆண் இரை தேடும்போது, சத்தம் கேட்டால் இரை ஓடி விடுமே என்ற பயத்தில் பேசியதே குறைவு. பெரும்பாலும் சமிக்ஞைகள் மூலமே தகவல் பரிமாறி வந்தான்.

ஆனால், பெண்களும் குழந்தைகளும் இருப்பிடத்தில் ஒருவருக்கொருவர் இணைப்பை ஏற்படுத்திக் கொள்ள பாலமாய், பேச்சுதான் உதவியது. இப்படி நாள் முழுவதும் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டே உறவு முறையைப் பலப்படுத்திக் கொண்டார்கள். லட்சக்கணக்கான ஆண்டுகளாய் அது இன்னும் தொடர்கிறது.

எந்தவிதச் சிரமுமின்றி பெண் ஒரு நாளைக்கு 4000 - 6000 வார்த்தைகளை உபயோகிக்க முடியும். ஆனால் ஆண்கள் 2000லிருந்து 4000 வரைதான். அதுவும் கடின உழைப்புக்குப் பிறகு அன்றைய மதியமே அவனுக்கு வார்த்தைகள் தீர்ந்துவிடும். வீட்டுக்குக் காலிப் பெட்டியாகத்தான் வருவான். பெண்ணோ நாள் முழுதும் ஏற்பட்ட அனுபவங்களால் நிறைந்த கல்லாப் பெட்டியாகக் குலுங்கிக் கொண்டிருப்பாள்!

ஒரு வாரம் தன் தோழியுடன் கழித்து விட்டு வீட்டுக்கு வந்தவுடன் அவளுக்கு ஃபோன் செய்து இரண்டு மணி நேரம் பேச பெண்ணால் மட்டுமே முடியும். வேறு என்ன இதற்குக் காரணம்?

ஆண் மூளை அமைப்பு பெட்டி பெட்டியாய் இருக்கிறது. அன்றைய நாளின்

## "பெண்'மணி' அல்லவா அதுதான் ஒலித்துக் கொண்டே இருக்கிறது!"



இறுதியில் அப்படியே பூட்டிவிட்டுத் தூங்கி விடுவான். ஆனால், பெண்ணின் மூளையின் இரு கோளங்களிலும் ஆணினுடையதைக் காட்டிலும் இணைப்புகள் அதிகம்.

அதனால் பல்வேறு பிரச்னைகளுக்கும் வழி கண்டுபிடிக்காவிட்டாலும் அதனைப் பிறரிடம் பகிர்ந்து கொள்வதில் அவளுக்கு ஆர்வம் அதிகம்.

'அப்பாடா... மனசுல இருக்கறதெல்லாம் கொட்டிட்டேன். பெரிய பாரம் இறங்கினாப் போல இருக்கு' என்பாள். அது போதும் அவளுக்கு.

ஆனால், ஆணுக்குத் தீர்வுதான் குறி. அன்று அதற்கு வழி இல்லையென்றால் அத்துடன் அதனை விட்டுவிடுவான்.

ஆணுக்கு ஃபோன், செல் எல்லாம் தகவல் பரிமாறிக் கொள்ள உதவும் சாதனங்கள். ஆனால், பெண்ணுக்கு உறவு முறையைப் பலப்படுத்தும் கருவிகள்.

ஆண்குழந்தையைவிடப் பெண் குழந்தை, தாயின் பேச்சை எளிதில் புரிந்து கொள்ளும் திறன் வாய்ந்தது.

பொதுவாக மொழித் திறன் ஆண்களைவிடப் பெண்களுக்கே அதிகம். பேச்சாற்றல், எழுத்தாற்றல் இரண்டிலுமே ஆண்களைவிடத் திறமைசாலிகள். பிற மொழிகள், இலக்கணம் இவற்றையெல்லாம் பெண்கள் எளிதில் கற்றுக்கொள்ள முடியும். அதனால்தான் உலகம் முழுக்க மொழி பெயர்ப்பாளர்கள், கவுன்சிலர்கள், ஆசிரியர்கள் என்று இத்துறையில் பெண்களின் எண்ணிக்கை அதிகம்.

(அலசுவோம்)

எழுத்தாக்கம் : **லக்ஷ்மி மோகன்**

### ரைட், ரைட்!



**வ**லப்பக்க மூளை அறைக் கோளத்தில், சைகை மொழித் தகவல் பரிமாற்றம், உடல் அசைவுகள் மூலம் தகவல் பரிமாற்றம், தொடுதல் மற்றும் பகுத்தறிவு, சிறு தகவல்களை ஒருங்கிணைத்து முழுமையான தகவல்களைப் பெறுதல் - இத்தனை செயல்பாடுகள் நடைபெறுகின்றன.

பக்கத்துக் கடைக்கு பெப்பர்மெண்ட் வாங்கச் சென்றாலும், எக்ஸாம் எழுதப் பரபரப்பாக பஸ்ஸைப் பிடிக்கச் சென்றாலும் கையிலோ அல்லது பையிலோ ஒரு செல்ஃபோன். அதிலிருந்து வருமொரு வயர். எந்நேரமும் ஒலித்துக்கொண்டிருக்கும் FM ஸ்டேஷனிலிருந்து வரும் பாட்டு, பேச்சு, இதைக் கேட்டபடியே (ரசித்தபடியே) நடப்பதுதான் இன்றைய லேட்டஸ்ட் ஃபேஷன்!

சதா சர்வ காலமும் இப்படி ஹெட்ஃபோனும் காதுமாகவே இருந்தால் நமது காதுகளுக்கு ஒன்றும் ஆகிடாதா என்ற அக்கறையோடு காது மூக்கு தொண்டை நிபுணர் டாக்டர் தனசேகரிடம் பேசினோம்.

# கேட்காதீங்க... கேட்காதீங்க...

''90 டெசிபல்

**ஹெட்ஃபோனைக் கண்ட இடத்தில் வைக்காதீர்கள்.**

ஒலி அளவு வரைதான் நம் காதுகள் தாங்கும். அதற்கு மேல் ஒலி அதிகமாகி விட்டால், Noice induced deafness என்ற நிலை ஏற்பட்டு நம் காதுகள் கேட்கும் திறனை மெல்ல இழந்துவிடும். அதனால்

* டாக்டர் தனசேகர்

எஃப்.எம் ரேடியோவைக் கேட்கலாம். ஆனால், குறைந்த சத்தத்தில் வைத்துக்கொண்டு கேட்பதுதான் காதுகளை நாம் பாதுகாத்துக் கொள்ள ஒரே வழி'' என்கிறார்.

**''ஒரு நாளைக்கு எவ்வளவு மணி நேரம் இப்படி ஹெட்ஃபோனோடு இருக்கலாம்?''** என்று கேட்டால்...

''அதிகபட்சமாக, ஐந்து முதல் ஆறு மணி நேரம் வரை தொடர்ந்து ஹெட்ஃபோனில் பாட்டு கேட்கலாம். அதிக அளவு இரைச்சல் அல்லது அதிக நேரம் தொடர்ந்து பாட்டு கேட்டுக்கொண்டே இருப்பதைக் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டும்.''

**ஹெட்ஃபோன்களினால், காதுகளுக்கு வேறு ஏதாவது பாதிப்பு ஏற்படுமா?**

''ஹெட்ஃபோன்களில் ஏதாவது infection ஏற்பட்டிருந்தால் அது காதுகளுக்குப் பரவக் கூடும். External otitis என்று இதற்குப் பெயர். ஹெட்ஃபோன்களை மென்மையாகக் கையாண்டு வந்து, அதைக் கண்ட இடத்தில் வைக்காமல் இருந்தாலே போதும். இந்தப் பிரச்னை எழாது.''



**"ஒரு நாளைக்கு அதிகபட்சமாக 5 முதல் 6 மணி நேரம் வரை ஹெட்ஃபோனில் பாடல் கேட்கலாம்."**

**ரேடியோ ஜாக்கிகளின் குரல் பராமரிப்புக்கு உங்கள் டிப்ஸ்...**

''Voice rest-ஐ அவர்கள் கட்டாயம் செய்ய வேண்டும். ஒரு நிகழ்ச்சி முடிந்து அடுத்த நிகழ்ச்சி தொடங்குவதற்கு முன் கட்டாயம் குரலுக்கு ஓய்வு கொடுக்க வேண்டும். ரொம்ப சத்தமாகப் பேசாமல் இருப்பது, குரல் மாற்றிப் பேசாமல் இருப்பது, குளிர்ந்த பதார்த்தங்களை உட்கொள்ளாமல் இருப்பது - இவை எல்லாமே ஆர்.ஜே.க்கள் கட்டாயம் செய்ய வேண்டியவை. குரலைச் சரியாகப் பாதுகாக்கவில்லை என்றால் இவர்களது vocal chordல் RJ nodules வந்து விட வாய்ப்புண்டு'' என்கிறார் டாக்டர் ஆர்.கே.தனசேகர்.

- நளினி சம்பத்குமார்

# கேட்டுக்கிட்டே... இருக்காதீங்க..!

# குரல்கள் தேசத்து ராஜகுமாரர்கள்!

சில குரல்கள் நமக்குப் பரிச்சயமாகியிருக்கும். ஆனால் அவர்களின் முகம்கூட நமக்கு அறிமுகமாகி இருக்காது. எஃப்.எம்-தேசத்தில் அப்படி வலம் வரும் சில ஆர்.ஜே.க்களின் அறிமுகப்படலம் இது.



சூரியன் எஃப்.எம்.மில் 'இனிய இரவு' நிகழ்ச்சி மூலம் பாப்புலர் ஆனவர் அருண். ஆர்ஜேவுக்கு அடுத்தபடியாக இவரின் களம் நாடகம்தான். பச்சையப்பன் கல்லூரியில் படித்தபோது 'உணர்வுகள்' எனும் நாடகக் குழுவைத் தொடங்கி இன்றளவும் நடத்தி வருகிறார். தமிழகத்தின் மரபார்ந்த கலைகளை மையப்படுத்தி நாடகங்கள் நடத்தும் அருணின் சொந்த ஊர் விழுப்புரம் மாவட்டம். அங்குள்ள வட்டாரங்களில் நடத்தப்படும் தெருக்கூத்துதான் தனக்கு இன்ஸ்பிரேஷன் என்கிறார் இவர். வரலாற்றின் முக்கிய அம்சங்களை நாடகத்தின் மூலமாக வழங்க முயன்று வருகிறார். ரேடியோ ஜாக்கியாக வருவதற்கு முன்பு ஆல் இண்டியா ரேடியோவில் அறிவிப்பாளராகப் பணி புரிந்திருக்கிறார்.



ரேடியோ ஒன் ஜாக்கி மிருதுளா, மீனம்பாக்கம் ஜெயின் கல்லூரியில் பி.எஸ்.சி. விஷுவல் கம்யூனிகேஷன் படித்தவர். சென்னை பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. மாஸ் கம்யூனிகேஷன் ஜர்னலிசமும் முடித்தவர். படிக்கும் காலத்தில் தினமணி, தூர்தர்ஷன்





மதுரை ரேடியோ மிர்ச்சியில் ஜாக்கியாகவும், ப்ரோக்ராம் ஹெட்டாகவும் இருக்கும் ராதா மணாளன் இலங்கை தலைநகர் கொழும்பு சக்தி பண்பலையில் பணிபுரிந்தவர். தனியார் நிறுவனங்களில் தேவைப்படும் மேடை நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்குகிறார். பல்வேறு தலைப்புகளில் வலைப்பூக்களில் எழுதி வருகிறார். இலங்கையில் இருந்தபோது பல்வேறு உணவு வகைகளைச் சுவைத்ததன் பயனாக மதுரையில் ரெஸ்டாரெண்ட் தொடங்கும் திட்டமும் வைத்துள்ளார்.

சூரியன் பண்பலையின் ரேடியோ ஜாக்கி ஷங்கர், ஆதித்யா டீ.வி.யில் திங்கள் முதல் வெள்ளி வரை ஜில்லுன்னு ஒரு கடி நிகழ்ச்சியில் கடிக்கிறார். கதிர்வேல் படத்தில் நெகட்டிவ் ரோல் செய்கிறார். சத்யபாமா கல்லூரியில் பி.டெக் பட்டம் பெற்றவர். பல நிகழ்ச்சிகளுக்கும், சீரியல்களுக்கும் டப்பிங் குரல் கொடுக்கிறார். ஒவ்வொரு மாதமும், மனநலக்காப்பகத்துக்குச் சென்று ஸ்வீட் கொடுப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளார்.




போன்ற நிறுவனங்களில் பயிற்சி பெற்றவர். வெப் டிசைனிங், கிராஃபிக் டிசைனிங் துறைகளில் ஆர்வம் கொண்டு பணியும் புரிந்தவர். தற்சமயம் பகுதி நேரமாக மனித வளத் துறையில் கன்சல்டன்டாகவும் கிராஃபிக் டிசைனராகவும் இருக்கிறார்.

'ரேடியா ஒன்'னில் ரேடியோ ஜாக்கியாக இருக்கும் அருண், லயோலா கல்லூரியில் கம்ப்யூட்டர் சயன்ஸ் முடித்தவர். தற்சமயம் சிம்போஸிஸ் ஸ்கூல் ஆஃப் மேனேஜ்மெண்ட்டில் எம்.பி.ஏ. படித்து வருகிறார். ஜி தமிழ் தொலைக்காட்சியில் 'அஞ்சறைப் பெட்டி' எனும் நிழ்ச்சியை வழங்குகிறார். ஒவ்வொரு ஊரின் சிறப்பான சமையலைப் பற்றிய நிகழ்ச்சி இது. லயோலா கல்லூரியில் படிக்கும் போது 'Star of Layola in Excellence Leadership' எனும் விருதைப் பெற்றவர் அருண்.



- ஆர்.குமார்

# முன்னைப் பழம்பொருளுக்கும் பழம்பொருள்!

**ஸ்ரீ** ராமனுடன் கூடப் பிறந்த தம்பிகள் மூவர் என்பது நமக்குத் தெரியும். ராமாயண கதைப்படி அதற்கப்புறமாக இன்னும் மூன்று பேர் இந்தச் சகோதரர்களுடன்கூட வந்து ஒட்டிக்கொண்டார்கள்! குஹன். இவன் சிருங்கிபேரத் தலைவன். 'குஹன்' என்று சொன்னாலே குஹ்யன் - சாதாரண, சராசரி மனிதர்களின் பிரதிநிதி என்றொரு பொருள் உண்டு. தன்னைச் சுற்றி இருக்கும் காட்டின் தன்மையைப் பிரதிபலிக்கும் விதமாக, இவன் காட்டுத் தன்மை நிரம்பியவனாக இருக்கிறான். இருள் சூழ்ந்த காடு! கரிய திருமேனி படைத்த குகன்!

இந்த குகன் முதலில் வந்து சேர்ந்தான். அதன் பிறகு சுக்ரீவன் வந்தான். 'நின்னுடன் ஐவரானேன்; பின் குன்று சூழ்வான் மகனுடன் அறுவரானேன்'. இதற்குப் பிறகு விபீஷணன். 'அன்பில் வந்த அகனமர் காதலய்ய நின்னுடன் எழுவரானேன்!' ஏழு பேர் இப்போது!

''என் அப்பா என்னைக் காட்டுக்கு அனுப்பினாலும் அனுப்பினார், அவருக்கு இத்தனை பிள்ளைகள் வந்து சேர்ந்தார்கள்!'' என்கிறான் ஸ்ரீராமன். 'புகலரும் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான்', 'எந்தை' (என் தந்தை) என்று சொல்லாமல், 'முந்தை' (உங்கள் தந்தை) என்று சொல்லி மகிழ்கிறான் ஸ்ரீராமன்.

குஹனுக்கு வயசென்ன? விபீஷணனுக்கு வயசு என்ன? வால்மீகியும் கம்பனும் துல்லியமாகச் சொல்கிறார்கள் சிருங்கிபேரத் தலைவன் குஹன், தசரத மஹாராஜாவுக்குத் தோழன் என்று. அப்படியானால் அவன் தசரதனுக்குச் சமகாலத்தவன். வாலியும் சுக்ரீவனுமோ ராமர் பிறப்பதற்கு முன்னாலேயே தோன்றினார்கள். ராவணனுக்குச் சொந்த சகோதரன் விபீஷணன். ராவணனின் வாழ்நாளைச் சொல்கிறபோது, முக்கோடி வாழ்நாள் வாழ்ந்து வருபவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய
பெருந்தவமும்
எக்கோடி யாராலும் வெலப்படா
எனக்கொடுத்தவரம்

### ராமாவதார காலம்

**எ**ல்லோரும் போய் பாற்கடலில் துயின்றுகொண்டிருந்த மஹாவிஷ்ணுவிடம் கேட்டார்கள். ''நீங்கள் இன்னும் அவதாரம் எடுக்கவில்லையே! மனிதனாக ஸ்ரீ ராமாவதாரம் எடுப்பேன் என்று சொன்னீர்களே; ஆனால் எடுக்கவில்லையே!'' என்று வேண்டினார்கள். அப்போது மஹாவிஷ்ணு பிரம்மாவைத்தான் திரும்பிப் பார்த்துக் கேட்டார்: ''அவதாரம் எடுக்கலாமா?'' என்று. பிரம்மா தானே ராவணனுக்கு வரம் கொடுத்

ஸ்ரீ லலிதா
நான்காம் பாகம்
5
சுதா சேஷய்யன்


ஸ்ரீ அமிர்த நாயகி
மன்னார்குடி

திருந்தார்! பிரம்மாவிடம் கேட்டுவிட்டு மஹாவிஷ்ணு சொல்கிறார், ''அவசரப் பட்டு அவதாரம் எடுத்து, ராவணனுடைய ஆயுள் காலம் முடிவதற்கு முன் நான் ராமனாகத் தோன்றிவிட்டால், பிரம்மாவின் வாக்கு பொய்யாகி விடுமே! அந்த வாக்கை உண்மையாக வைக்க, முக்கோடி வாழ் நாள் முடியும்வரை காத்திருந்து, பொருத்தமான நேரத்தில்தான் அவ தாரம் எடுக்க வேண்டும்...''



## ஆற்றலில் உயர்ந்தவர்

அப்படியானால் ஸ்ரீ ராமாவதாரம், ராவணன் தோன்றி நீண்ட நெடுங்காலத் துக்குப் பிறகு எடுக்கப்பட்டதுதானே? ராவணனுடன் கூடப்பிறந்த விபீஷ ணன் ராமனைவிட மூத்தவன் என்று ஒப்புக்கொள்ளலாம் அல்லவா?

ஆனால் விபீஷணனுக்கும் ராமன் தான் மூத்தவர் என்கிறோம். லக்ஷ்மணன், பரதன், சத்ருக் னனுக்கும் ஸ்ரீராமனுக்கும் வயது வித்தியாசம் பெரிதாக ஒன்றுமில்லை. மூன்று பேருமே ஒரொரு நாள் இடைவெளி யிலே பிறந்தவர்கள்தான். அந்த ஒரேயொரு நாள் வித்தி யாசத்துக்கே 'ராமன் பெரி...ய்ய அண்ணன் மூத்த அண்ணன்' என்று கொண்டாடுகிறார்கள் தம்பிகள்! காரணம் என்ன...? ஆற்றலில் உயர்ந்தவரை மூத்தவர் என்று கொண்டாடுவது இந்த தேசத்தின் பாரம்பரியம். ஒரே குடும்பத்தில் ரத்த சம் பந்தத்துடன் அவர்கள் பிறந்திருக்க வேண் டும் என்று அவசியம் இல்லை. இரண்டு பேருக்கு ஒரே மாதிரி ஆற்றல் இருந்தென் றால் அவர்கள் இருவரையும் சகோதரர்கள் என்று சொல்வது வழக்கம்தான். அந்த இருவரில் ஆற்றலில் சற்றே உயர்ந்தவரைக் கூட 'அண்ணா' என்று குறிப்பிடுவதும் மரபு. 'அண்ணன் ஸ்வாமிகள்' போன்ற ஒரு பதம் இப்படித்தான் ஏற்பட்டது. என்னை விட ஆற்றலில் உயர்ந்தவர் ஒருவர் இருந்தால், வயதில் இளையவரானாலும் அவரே மூத்த சகோதரர்! 'கறைக் கண்ட னுக்கு மூத்தவளே' என்று அபிராமி பட்டர் பாடியதும் இந்த மரபை யொட்டித்தான்.

கறைக்கண்டன், ஸ்ரீகண்டன் என்றால் அது பரமேசுவரனைக் குறிக்கும். அவர் உயர்ந்தவர்தான். ஆனால், அவருடைய ஆற்றலையும் வெளியே பிரவாகிக்கச் செய் யக்கூடியவள், விமர்ச ரூபிணியாக இருப் பவள் அம்பிகை என்கிறபோது, அவரை விட ஆற்றலில் உயர்ந்தவளாக இருந்தால் தானே அது முடியும்! ஆக, கறைக்கண் டனுக்கு மூத்தவளே என்று சொன்னது அவள் ஆற்றலைக் குறிக்கத்தானே தவிர, வயதில் மூத்தவள் என்பதனால் அல்ல. விருத்தா என்கிற திருநாமமும் இதையே

தான் சொல்கிறது - ஆற்றலில் முதிர்ந்தவளாக ஸ்ரீ லலிதாம்பிகை இருக்கிறாள். முன்னைப் பழம்பொருளுக்கும் பழம்பொருளாக இருக்கிறாள்; அதேசமயம் பின்னைப் புதுமைக்கும் புதுமையாக இருக்கிறாள். எல்லாவற்றையும் ஆளக் கூடிய ஆற்றலில் வ்ருத்தாவாக இருக்கிறாள்.

### ஐக்கிய ஆனந்தம்:

**பிரும்மாத்மைக்ய ஸ்வரூபிணி**- பிரம்மாத்மாவாக இருக்கக்கூடிய பரம் பொருள்- அந்தப் பரம்பொருளோடு ஐக்கியமாக இருக்கக்கூடியவள்.

**பிரஹதி**- எல்லாவற்றையும்விடப் பெரியவளாக இருக்கக்கூடியவள்.

**பிராஹ்மணி**- இந்தச் சொல்லுக்கு சிவப்

**"என் அப்பா என்னைக் காட்டுக்கு அனுப்பினாலும் அனுப்பினார், அவருக்கு இத்தனை பிள்ளைகள் வந்து சேர்ந்தார்கள்!"**

பரம்பொருளின் தர்மபத்னி என்று அர்த்தம். பிரம்மத்தினுடைய தர்மபத்னி **பிராஹ்மணி.**

**பிராஹ்மி** - சிருஷ்டிகர்த்தாவான பிரம்மா ஸ்வரூபமாகவும் விளங்குபவள்.

**பிரம்மானந்தா** - பரபிரம்மத்தோடு ஐக்கிய ஆனந்தத்தை அனுபவிப்பவள். அந்த ஆனந்தத்தை உயிர்களுக்கெல்லாம் தரக்கூடியவள்.

### வேண்டும் வைராக்கியம்

**பலிப்ரியா:** திரும்பவும் சிக்கலான திருநாமம். பாரம்பரியம் தெரியாவிட்டால், பலி கொடுப்பதால் ப்ரீதி அடைகிறவள் என்று பொருள் கூறி விடுவோம் ஆனால், பொருள் இதுவல்ல. யாரெல்லாம் பலிகளாக இருக்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம் வரங்களைத் தருபவள்; ப்ரீதியாக இருப்பவள்.

பலி என்றால் என்ன...? பிரஹலாதனுடைய பேரனுக்கு மஹாபலி என்று பெயர். பலம் பொருந்தியவர்கள் 'பலி' என்று அழைக்கப்பட்டனர். பலம் என்பது இங்கே சண்டை போடும் ஆற்றலைக் குறிப்பதல்ல. உடல் வலிமையே பலம் என்று நாம் சாதாரணமாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால், ஆத்ம பலம், வைராக்கியம் என்பதைத்தான் இந்தத் திருநாமம் குறிக்கிறது. அம்பாளை உபாஸிக்கும்போது, என்னதான் இடர் வந்தாலும், அதைத் தாண்டி வைராக்கியத்தோடு அவளை வழிபடுவது. குண்டலினி சக்தியை ஏற்றுவது, அதைக் கொண்டு போய் ஸஹஸ்ரார கமலத்தில் சேர்ப்பது என்கிறோமே, அது சுலபத்தில் சாத்தியமில்லை. ஏராளமான வைராக்கியம் வேண்டும். எந்தவொரு கவனச் சிதறலும் இருக்கக்கூடாது. 'முப்பது நாட்களில் குண்டலினி பயிற்சி' என்பது போன்ற அறிவிப்புகள், புத்தகங்களையெல்லாம் பார்க்கிறோம். வார்த்தைகளில் விவரிக்க முடியாத ஒரு அனுபவத்தைப் புத்தகம் மூலம் எவ்வாறு கற்றுக் கொள்ள முடியும்!

உபாஸனை விதிகளில் கடுமையாய் இருந்து, அவரவரது வைராக்கியத்தினால் மட்டுமே குண்டலினி சக்தியை எழுப்ப முடியும். உபாஸனா விதியில் மட்டுமல்ல; வாழ்க்கையில் எல்லா தளங்களிலுமே சாதாரணமாகவேகூட அப்படித்தான் வைராக்கியத்துடன் இருக்க வேண்டும்.

**(வளரும்)**

# காற்றில் வரும்

எஃப்.எம். வானொலியைக் கண்டு பிடித்தவர் எட்வின் ஹெச். ஆர்ம்ஸ்ட்ராங். 1933ல் எஃப்.எம். வானொலிக்காக அவருக் குக் காப்புரிமையும் கிடைத்தது. அவர் தமது ஆய்வகத்தில் வேறெதோ ஒன்றை ஆய்வு செய்துகொண்டு இருந்தபோது, இந்த Frequency Modulation (FM) ரேடியோவைக் கண்டுபிடித்தார்.

இதனை பொதுமக்கள், பத்திரிகை யாளர்கள் முன்பு ஒலிபரப்பிக் காட்டும் பெரிய நிகழ்ச்சியை 1936ல் செய்து காட்டினார். முதலில் சாதாரண வானொலி யில் அவர் ஒரு ஜாஸ் இசைத்தட்டை ஓடவிட்டார். பின்னர், அதே இசையை எஃப்.எம். மூலம் ஒலிபரப்பினார். அதைப் பற்றி ஒரு நிருபர் இவ்வாறாக எழுதினார்:

'அங்கே கேட்டுக் கொண்டு இருந்த ஐம்பது என்ஜினீயர்களும் தம் கண்களை மூடிக்கொண்டு கேட்டிருந்தால், அந்த ஜாஸ் இசை அந்த அறையிலேயே இசைக்கப்பட்டதாகத் தோன்றியிருக்கும்.'

இதற்குக் காரணம் என்ன? பொதுவாக நாம் பயன்படுத்தும் வானொலியை ஏ.எம் (Amplitude Modulated) வானொலி என்கிறோம். இதன் ஒலிக்கற்றையின் வலு மிக அதிகம். எவ்வளவு தூரம் வேண்டு மானாலும் செல்லக்கூடியது. ஆனால், எஃப்.எம். வானொலியோ சிற்றலை என்று சொல்லக்கூடிய குறைந்த அளவே அலைக் கற்றை உடையது.

இந்த அலை, பெரிய கட்டடங்கள், மரங்கள், இன்னபிற தடுப்புகளைச் சந்திக் கும்போது, தடைப்படக்கூடியது. ஆனால், இது சிற்றலையாக இருப்பதனாலேயே இதன் ஒலிபரப்பு துல்லியமாக இருக்கும். மேலும், எந்தவிதமான பின்னணி சப்தங்களும் இன்னபிற இரைச்சல்களும் எஃப்.எம். வானொலியில் கேட்காது.

எஃப்.எம். வானொலியின் ஒரே பிரச்னை, அது நீண்ட தூரம் பயணிக்காது என்பதுதான். மேலும் ஒரே அலைவரிசை யில், அடுத்து அடுத்து இருக்கும் ஊர்களிலேயே வேறு வேறு வானொலிகள் இயங்க முடியும். இதற்குக் காரணம், ஒவ்வொரு வானொலியும் இத்தனை கிலோ மீட்டர் வரை மட்டுமே ஒலி பரப்பு செய்ய வேண்டும் என்று வரையறை செய்யப்பட்டிருப்பதே.

இன்றைக்கு வானொலி யின் வளர்ச்சி பன்மடங்கு பெருகிவிட்டது. இன்டர்நெட் ரேடியோ, டிஜிட்டல் ஆடியோ பிராட்காஸ்டிங், சாட்டிலைட் ரேடியோ என்றெல்லாம் பல்வேறு வித மான வானொலிகள் புழக் கத்துக்கு வந்துவிட்டன.

## நியூஸ் பேரேஜ்

அகில இந்திய வானொலி 1970களில் 'வானொலி' என்ற மாத இதழை வெளியிட்டு வந்தது. இதில் மாதம்தோறும், தமிழகத்தில் உள்ள வானொலி நிலையங்களில் ஒலிபரப்பாகும் நிகழ்ச்சிகளைப் பற்றிய விவரங்கள் இடம் பெற்றன.

## ஆர்.வெங்கடேஷ்

இணையத்தில் வானொலி நிகழ்ச்சிகளை ஒலிபரப்புவதே இன்டர்நெட் ரேடியோ. வட அமெரிக்காவில் தென்றல் என்ற இணைய வானொலி இருக்கிறது. ஆஹா எஃப்.எம்.மை இணையத்

# தேவதை!




திலும் கேட்க முடிந்தது. முன்பு வேர்ல்ட் தமிழ் நியூஸ் என்ற இணைய வானொலி சேவை புகழ்பெற்றிருந்தது.

ஐரோப்பாவில், டிஜிட்டல் ஆடியோ பிராட்காஸ்டிங் (Digital Audio Broadcasting- DAB) என்ற புதிய ஒலிபரப்பு முறை பரவலாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. 2006ஆம் ஆண்டு கணக்குப்படி, உலகெங்கும் கிட்டத்தட்ட 1000 ரேடியோ நிலையங்கள் டாப் (DAB) முறையில் ஒலிபரப்பு செய்துவருகின்றன.

இந்த ஒலிபரப்பு முறையின் ஆராய்ச்சி, 1980களில் ஆரம்பித்தது. பின்னர், 1995ல் தான் முதல் டாப் ஒலிபரப்பு நடைபெற்றது. பிப்ரவரி 2007ல், டாப்+ என்ற அடுத்த கட்ட வளர்ச்சி இந்த ஒலிபரப்பு முறையில் ஏற்பட்டிருக்கிறது. ஏற்கெனவே, டாப் முறை ஒலிபரப்பு துல்லியமானது என்றால், டாப்+, டபுள் துல்லியம்.

சாட்டிலைட் ரேடியோ என்பது முற்றிலும் சந்தாதாரர்களுக்கான ரேடியோ. வேர்ல்ட் ஸ்பேஸ் போன்ற வானொலிகள் இந்த வகையைச் சேர்ந்தவை. இந்த நிகழ்ச்சிகள் தொலைத்தொடர்பு சாட்டிலைட்கள் மூலம் ஒலிபரப்பப்படுகின்றன. இந்த வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்க நீங்கள் பணம் கட்டி சந்தாதாரர் ஆகவேண்டும். இதில் இருக்கும் ஒரு முக்கிய வசதி, நாட்டின் எந்த மூலைக்குப் போனாலும், உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சியைக் கேட்க முடியும்.

எஃப்.எம். - வானொலியின் அடுத்த கட்டம், ஹெச்.டி. ரேடியோ (High Defini-

tion Radio). எஃப்.எம். வானொலியே துல்லியமானது. அதில் இன்னும் சிறப்பாக உயர்ந்த ஒலித் தரத்தைக் கேட்கலாம். அமெரிக்காவில் மட்டும் 1,900 வானொலி நிலையங்கள் ஹை டெஃபனிஷன் தொழில் நுட்பத்தின் மூலம் நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி வருகின்றன என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்.

வானொலியின் வளர்ச்சி பற்றி பேசிக்கொண்டே வந்தோம் அல்லவா? முதன்முதலில் எஃப்.எம். வானொலியை உருவாக்கியவரின் கடைசி காலம் எப்படி இருந்தது தெரியுமா? பரிதாபமாக. அவர் கண்டுபிடித்த வானொலி தொழில்நுட்பத்தைப் பயன் படுத்த முடியாமல், பெரிய இக்கட்டுகள் ஏற்பட்டு, தொடர்ந்து நீதிமன்றப் படியேறி, கடைசியில் கையில் சல்லிக்காசு கூட இல்லாமல் ஆம்ஸ்ட்ராங் இறந்து போனார்.

இன்றைக்கு உலகெங்கும் எஃப்.எம். வானொலிகள் ஒலித்துக்கொண்டு இருக்கின்றன; ஆம்ஸ்ட்ராங் மட்டும் அதன் புகழை அனுபவிக்கவில்லை.





## அம்பாசமுத்திரம் அம்பானி

திண்டுக்கல் சாரதி இப்போது 'அம்பா சமுத்திரம்' அம்பானி. ஆமாம், சாரதியில் காமெடியும் காம்ப்ளக்ஸுமாகக் கலக்கிய கருணாஸ், அம்பானியில் சென்டிமென்ட் காமெடியில் ஹீரோவாக நடிக்கிறார். அம்பாசமுத்திரத்தில் பிறந்த ஓர் ஏழைக் குடும்பத்துப் பையன், அம்பானி ரேஞ்சுக்குப் பணக்காரனாக வேண்டும் என்ற கனவோடு சென்னை வருகிறான். சென்னை அவனை என்ன செய்தது... அன்னையாக அரவணைத்ததா... இல்லை, எட்டி உதைத்ததா... என்பதுதான் கதை. இப்படத்தை எழுதி இயக்கும் பி.ராம்நாத் வேறு யாருமல்ல. காமெடி சீன் உருவாக்கத்தில் கருணாஸிடம் உதவியாளராகப் பணிபுரிந்தவர்தான். 'திண்டுக்கல் சாரதி' கொடுத்த நம்பிக்கையில்தான் 'அம்பாசமுத்திரம் அம்பானி'யை உருவாக்கியதாகச் சொல்கிறார் இவர். ''எனக்கு பாக்யராஜ் ஸார் படங்களின் சென்டிமென்ட் ரொம்பப் பிடிக்கும். சென்டிமென்ட் என்றால் அழுது வடிவதில்லை. மிக மென்மையாகக் கையாண்டிருப்பார். அது போலவே இதில் சென்டிமென்ட் இருக்கும்'' என்கிறார்.

- மீனா

# பதக்க ப்ரியா!



''எட்டு வயதில் முதல் போட்டி, மாநில அளவுல கராத்தே டோர்னமெண்ட் வெற்றி வாய்ப்பு கை நழுவிப் போனது. அந்த நிமிடமே உறுதியா தீர்மானிச்சேன். இனிமே எந்தப் போட்டியிலும் நாம தோத்துடக்கூடாது. ஜெயிச்சுட்டே இருக்கணும்னு. சிட்டோ ரியோ நிப்பான் கராத்தே பிரிவில் பிரவுன் பெல்ட் வரை வாங்கி இருக்கிறேன். இந்த வாரத்தில் (நவம்பர் 2009) பிளாக் பெல்ட் பெற இருக்கிறேன்'' எனச் சொல்லும் வசந்தபிரியா ஸ்ரீரங்கம் பெண்கள் மேனிலைப் பள்ளியில் பிளஸ் ஒன் மாணவி. அப்பா நாராயணன் டிரைவர். அம்மா ராஜேஸ்வரி டெய்லர். பகுதி நேரமாகப் பெட்டிக்கடை வியாபாரம்.

இந்த வாழ்க்கைச் சூழலிலிருந்து வெளிக் கிளம்பும் வசந்தபிரியா, இதுவரை கடந்த எட்டு ஆண்டுகளில் மட்டும் நூற்றுக்கணக்கான போட்டிகளில் பங்கேற்றுள்ளார்.



* வசந்த பிரியா

''வசந்த பிரியாவின் கராத்தே ஆர்வம்தான், அவளது முழு வெற்றிக்குக் காரணம். எந்த ஊரில் போட்டி நடந்தாலும் அங்கு வசந்தபிரியா போனால், மற்ற மாஸ்டர்களும், போட்டியாளர்களின் பெற்றோர்களும் வசந்தபிரியாவுக்குத்தான் ஃபர்ஸ்ட் பிரைஸ் என்று பேசிக் கொள்வார்கள். பதக்க பிரியா என்கிற பட்டப் பெயரும் உண்டு'' என்கிறார் கராத்தே மாஸ்டர் திவாகர்.

''2002ல் மாநில அளவுல முதல் பரிசு வென்றேன். அதுக்கு அப்புறம் பங்கேற்ற நூற்றுக்கும் மேற்பட்ட போட்டிகள்ல பெரும்பாலும் முதல் பரிசு ஜெயிச்சிருக்கேன். சிலதுதான் ரெண்டாமிடம், மூணாமிடம். இது வரைக்கும் அஞ்சு கிராம் வெள்ளி, பத்து கிராம் வெள்ளினு மொத்தம் நூத்தியிருபது கிராம் வெள்ளி எனக்குப் பரிசா கிடைச்சுருக்கு. ஷீல்டு, பதக்கம்னு இதுவரைக்கும் முப்பது கிராம் தங்கம் பரிசுகளாக வாங்கியிருக்கேன். காமன்வெல்த் போட்டிகள்ல பங்கேற்றுப் பரிசு வாங்கறதுதான் என் லட்சியம்'' என்கிறார் வசந்த பிரியா.

செய்திச் சித்திரம்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# எங்க வீட்டுப் பிள்ளை!

**ம**துரை மேலப் பொன்னகரம், தொழிலாளர்கள் நிறைந்த குடியிருப்புப் பகுதி. மதுரையில் உள்ள மில் தொழிலாளர்கள், ரயில்வே தொழிலாளர்கள் அங்குள்ள ஃபிடல் காஸ்ட்ரோ படிப்பகத்தில் காலையும், மாலையும் கூடுவார்கள். தொண்ணூறு சதவிகிதம் கம்யூனிஸ்ட் தோழர்கள். நாட்டு நடப்பைப் பற்றி அனல் பறக்கும் விவாதங்கள் அங்கே அரங்கேறும். முற்போக்குச் சிந்தனைகள் சாரலாய்த் தெறிக்கும். அந்தச் சூழலில் வளர்ந்த சிறுவன் காம்ரேடாய் மாறிப் போனதில் ஆச்சரியமில்லை. ஆனால், அந்தத் தோழர் ஒரு தீவிர எம்.ஜி.ஆர் ரசிகரும்கூட. 'வாத்தியார்' படம் ரிலீஸ் என்றால் முட்டி மோதி முதல் காட்சியிலேயே பார்த்துவிட்டு வருபவர். ''ஏழைப் பங்காளனாக எம்.ஜி.ஆரைப் பார்த்ததால்தான் பாமர மக்களுக்காகப் பாடுபடும் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் என்னை இணைத்துக்கொண்டேன்'' என்று சொன்னவர். அவர் மோகன். மதுரையின் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர். அவர் இறப்புக்கு சர்வகட்சியினர் மட்டுமல்லாமல் சாமான்ய எளிய மக்களும் திரண்டு வந்து அனுதாபம் தெரிவித்த காட்சி, மதுரை மக்கள் மனத்தில் பச்சென்று அவர் ஒட்டியிருப்பதையும் புரிய வைத்தது. ''ஜே.டி.கே. தங்கமணி, பி.ராமமூர்த்தி, ஜானகி அம்மாளுக்குப் பிறகு மதுரை கண்ட மிகப் பாப்புலரான காம்ரேட் இவர்தான்'' என்கிறார் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலக்குழு உறுப்பினர் ஜோதிராம்.

பகத்சிங், பாரதி, நேதாஜி என்று தமது குழந்தைகளுக்குப் பெயர் வைத்ததிலிருந்தே அவர் எப்படிப்பட்ட சிந்தனைகளுக்குச் சொந்தக்காரர் என்பது புரியும். அப்பா பொன்னுசாமி, மோகனைக் கிறிஸ்துவ மதபோதகராக உருவாக்க வேண்டும் என்று நினைத்திருக்கிறார். கட்சி வேலை நேரத்தை எடுத்துக்கொள்ள சட்டப் படிப்பைப் பாதியில் விட்டவர். எளிதில் உணர்ச்சி வசப்படுபவர்; பகைமை பாராட்டாதவர்; பளிச்சென்று பேசுபவர். தொகுதி நிதியை மதுரை அரசு மருத்துவமனைக்கும், மாநகராட்சிப் பள்ளிகளுக்கும் மட்டுமே பெரும்பாலும் செலவழித்தவர். மனைவி பூங்காவனம் மாநகராட்சி பள்ளி ஆசிரியை. தம் வாழ்நாளில் 56 நாட்கள் ஜெயிலில் இருந்தவர். ''சென்ற தேர்தலில் அவருக்கு உடல் நலமில்லாததால் பல இடங்களுக்குப் பிரசாரத்துக்குச் செல்ல முடியவில்லை. இங்கு அதிகார துஷ்பிரயோகமும், பண பலமும் எப்படி ஆட்டம் போட்டன என்று எல்லோருக்கும் தெரியும். தேர்தலில் தோல்வியுற்றாலும், மதுரையைப் பொறுத்தவரை அவர் என்றும் 'எங்க வீட்டுப் பிள்ளை'தான் என்று உழைக்கும் மக்கள் ஓங்கியடித்துச் சொல்வார்கள்'' என்கிறார் ஜோதிராம். - ப்ரியன்

அஞ்சலி

● ஷ்யாமளா சுவாமிநாதன், வல்லக்கடவு

? சீன உதவியுடன் அராஜகம் செய்யும் நாக்ஸல் மாவோயிஸ்டுகளது கோரிக்கைகளைக் கேட்க இந்திய அரசு நிபந்தனை விதிக்காமல் பேச்சு வார்த்தைக்கு அழைக்க வேண்டுமாமே? அங்குள்ள மனித உரிமை சங்கங்கள் இவ்வாறு கூறுவது சரியா?

! 'புலியிடம் வேதாந்தம் பேச வேண்டும்' என்று அறிவுரை வழங்குகிறார்கள்! ''அது பூனையாக மாறட்டும்; பேசுவோம்'' என்கிறார் சிதம்பரம்! இந்த இழுபறிகளுக்கு இடையில் மக்களின் அவதி தொடர்கிறது. எல்லாத் தரப்பினரும் ஈகோவைக் கைவிட்டு மக்களைப் பற்றிச் சிந்தித்தால் பிரச்னை தீரும்.

* வாங்கும் வக்காலத்து!

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? '''ஸ்பெக்ட்ரம்' ஒதுக்கீட்டில் முறைகேடு நடந்ததாக எதிர்க்கட்சிகள் குற்றம் சாட்டுவது சரியில்லை... ஜனநாயகத்தில் இதுபோன்ற குற்றச்சாட்டுகள் கூறப்படுவது இயல்புதான். அதற்காக அந்தக் குற்றச்சாட்டு சரியென்று அர்த்தமாகிவிடாது'' என பிரதமர் மன்மோகன் சிங் கூறியுள்ளது குறித்து?

! அமைச்சரவை சகாக்களுக்குப் பிரதமர் வக்காலத்து வாங்குவதும் இயல்புதான். அதற்காக பிரதமர் சொல்வது சரி என்று ஆகிவிடுமா!

# காவல் நிலையத்தில் கடா வெட்டலாமா?

## நீங்கள் கேட்டவை - தராசு

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? ''ஒரு கட்சி ஆட்சி என்ற சித்தாந்தம் இனி கிடையாது'' என்கிறாரே லாலுபிரசாத் யாதவ்?

! அதனால் தலைவர்களின் பொறுப்பும் அதிகமாகிறது என்பதைக் கூற மாட்டாரே! மஹாராஷ்டிரத்தில் நடப்பதைப் பாருங்கள். தேர்தலை ஒன்றாகச் சந்தித்தவர்கள் ஒன்று சேர்ந்து ஆட்சி அமைக்க முடியாதது கேவலம் அல்லவா?

● என்.சண்முகம், திருவண்ணாமலை

? சேலத்தில் குற்றங்கள் குறைய வேண்டும் என்பதற்காக, போலீஸ் ஸ்டேஷனில் கடா வெட்டி போலீஸ்காரர்கள் சாமி கும்பிட்டது பற்றி...?

! சரியாகத்தான் கேள்வி கேட்டிருக்கிறீர்கள். அவர்கள் கும்பிட

**❐ ரூ.150/- பரிசு பெறுபவர்:**

**வீ.சீதா, மதுரை - 20**

வில்லை; கூம்பித்தான் விட்டார்கள்!

● **என்.சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்**

***? கருணாநிதியை ஒழிப்பதுதான் அ.தி.மு.க.வின் பிறவிப் பயன் என்று ஜெயலலிதா பேசியுள்ளது பற்றி...?***

*!* அநாகரிகமாகப் பேசுவதுதான் தனது பிறவிப் பயன் என்று ஜெயலலிதா கருதுவதாகத் தெரிகிறது. முரசொலி மூலம் அவருடன் யுத்தம் செய்து வரும் கருணாநிதி, இவ் விஷயத்தில் தாம் ஜெயலலிதாவுக்குச் சளைத்தவரல்ல என்று நிரூபிக்க முற்பட்டுள்ளார்.

● **ஜி.கே.எஸ்.மூர்த்தி, கோபிசெட்டிபாளையம்**

***? பெஷாவர் மார்க்கெட் குண்டு வெடிப்பில் 95 அப்பாவிகள் பலியான கோர சம்பவம் குறித்து...?***

*!* அந்த குண்டு வெடிப்பு, பயங்கரவாதத்தை ஒழிக்க பாகிஸ்தானுக்குக் கோடி கோடியாக அள்ளிக் கொடுக்கும் அமெரிக்காவுக்கு எதிரான தாக்குதல். அதனால்தான் ஹிலாரி விஜயத்தின்போது நடைபெற்றது. பலியானதுதான் அப்பாவி பாகிஸ்தானியர்.

● **எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்**

***? இலங்கைத் தமிழர்களுக்காக வழக்கறிஞர்கள் நடத்திய போராட்டம், நான்கு போலீஸ் உயர் அதிகாரிகளை தற்காலிக பணி நீக்கம் செய்யுமளவுக்குப் போய் முடிந்திருக்கிறதே. உயர்நீதிமன்றம் அவ்வாறு உத்தரவு பிறப்பித்துள்ளது குறித்து...?***

*!* இரு தரப்பிலும் தவறு இருக்கிறது என்று கூறிவந்த நடுநிலையாளர்களை, இனி, 'முத்தரப்பிலும் தவறு இருக்கிறது' என்று கூற வைக்கும் தீர்ப்பு!

● **வி.சீதா, மதுரை - 20** ❐

***? அரசாங்க விளம்பரத்தில், யம தர்மராஜன் ஒரு நோயாளியின் உயிரைப் பறிக்க வருவது போலவும், முதல்வரே யமனை வீழ்த்துவது போலவும் சித்திரித்திருப்பது சரியா? நடக்கிற காரியமா?***

*!* காப்பீடு என்பது சிகிச்சைக்கான செலவைத் தருகிற திட்டம். சிகிச்சை பெறக் கூடிய எல்லோருமே யமனை வென்றுவிடுவதில்லை; சிகிச்சை தேவைப்படுவோர் அனைவரையும் யமன் அணுகுவதுமில்லை! ஆகவே, யதார்த்த ரீதியாகவும் பகுத்தறிவு ரீதியாகவும் இந்த விளம்பரம் தவறானது!

● **பவானி கிருஷ்ணா, பெங்களூரு**

***? தான் பயணம் செய்வதற்கு ஏதுவாக வெடிகுண்டு புரளி கிளப்பி, சரியான நேரத்தில் புறப்படவிருந்த விமானத்தைத் தாமதப்படுத்தியுள்ளாரே ஓர் இளைஞர்? கம்ப்யூட்டர் என்ஜினீயரான அந்த அபிஷேக் குப்தாவின் மூளை எப்படி வேலை***

✱ நோ நோபாமா! ✱ முன்னேற்ற திசையில்... ✱ இரட்டைத் தவறு!









• பொறுப்பை மறந்து...



• வெடித்த அதிருப்தி!



• டபுள் கண்டனம்!

**செய்தது பார்த்தீர்களா?**

! அவர் மூளை அப்படியொன்றும் சரியாக வேலை செய்யவில்லை. அதனால்தான் தமது செல்ஃபோனையே பயன்படுத்தி மாட்டிக்கொண்டார். (என்ஜினியருக்கும் அடி சறுக்கும்!)

**● த.குமார், பொள்ளாச்சி** ★

**? பாகிஸ்தானுக்கு 2010ஆம் ஆண்டுக்கான ராணுவ நிதி உதவியாக ரூ. பதினொன்றாயிரத்து ஐந்நூறு கோடியை வழங்க, நோபல் பரிசு பெற்ற அமெரிக்க ஜனாதிபதி ஒபாமா அனுமதி அளித்துள்ளது சரியா?**

! பயங்கரவாதத்தை எதிர்ப்பதற்கான உதவித் தொகை என்ற போர்வையில் வழங்கப்படும் தொகையை, பாகிஸ்தான் இந்தியாவுக்கு எதிராகத் தாக்குதல் நடத்தவும் பயன்படுத்தி வருகிறது என்பது நிரூபணமாகியுள்ள நிலையில், இது நோபாமா! நோபாமா!

**● என்.காளிதாஸ், சிதம்பரம்**

**? பா.ஜ.க. ஆட்சியில் ரூ 1.6 லட்சம் கோடி டெலிகாம் ஊழல் நடைபெற்றுள்ளதாக மத்திய அமைச்சர் ஆ.ராசா குற்றம் சாட்டியுள்ளாரே?**

! அது தெரிந்தும் அதே ரக ஊழலை மீண்டும் நடக்க அனுமதித்ததற்காக இரட்டிப்புக் கண்டனத்துக்கு உள்ளாகிறார் ராஜா!

**● இரா.சக்கரபாணி, மதுரை**

**? முல்லைப் பெரியாறு பிரச்னை தொடர்பாக நவம்பர் 1இல் மதுரையில் நடைபெறவிருந்த கண்டனப் பொதுக்கூட்டம் திடீரென்று ரத்து செய்யப்பட்டுள்ளது ஏன்?**

! 'நீதிமன்றத்தில் வழக்கு இருப்பதால்' என்று கருணாநிதி கூறிய காரணம் சரியானதே. எனினும், ஜெயலலிதா கூறுவது போல், வழக்கு இருப்பது தெரிந்துதானே முதலில் போராட்டம் அறிவிக்கப்பட்டது!

**● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்**

**? மிகவும் வறுமையில் வாடிக் கொண்டிருந்தவர்களெல்லாம் அ.தி.மு.க.வில் சேர்ந்து பெரும் பணக்காரர்களாகி விட்டதாக அ.தி.மு.க.வின் பொதுக்குழுவில் ஜெயலலிதா பேசியிருக்கிறாரே - இது எப்படி என்று விளங்கவில்லையே?**

! ஜார்கண்டின் முன்னாள் முதல்வர், பதினைந்து ஆண்டுகளுக்கு முன் கூலி வேலை செய்து வந்த கோடா - அரசியலில் நுழைந்து முப்பது கோடிக்குச் சொத்து சேர்த்தது எப்படியோ, அப்படித்தான்! இதற்கு மேலும் விளக்கம் தேவையா!?

**● வீ.உதயக்குமாரன், வீரன்வயல்**

**? நரேந்திர மோடிக்குப் பன்றிக் காய்ச்சல் வந்துள்ளதே?**

! நல்ல மருத்துவக் கவனிப்பால் விரைந்து தேறி வருவது நல்ல விஷயம்தான். ○

★ ரூ.75/- பரிசு பெறுபவர்:

**த.குமார், பொள்ளாச்சி**

**கா**லேஜில்... செமஸ்டர் சைக்ளோன் ஃபார்ம் ஆகியிருந்தது- இந்த சந்தர்ப்பத்தில் (யோவ் நான் நல்ல ஸ்டூடண்ட்டா ஃபார்ம் ஆயிட்டேன் சொன்னா நம்புய்யா!) அது வலுக்கொண்டு கரையைக் கடக்குமுன் வாசக் கதகதப்புக்கு யூத் டேலண்ட் யூஸாகுமான்னு கல்கி ஜாலி விஸிட் டீம் இந்த முறை என்ட்ரி ஆனது... சென்னை போரூரில் உள்ள **ஆல்ஃபா அறிவியல் கலைக் கல்லூரியில்...** அட என்ன அழகான காலேஜ்... (கட்டடத்தைச் சொன்னோம்பா!) அந்த கேம்பஸ்ல யோகா to காமெடி, கானா to மெலோடி, ஆட்டம் to ஆர்க்யூமெண்ட், சர்வீஸ் to சாதனை எல்லாமே அசத்தல்தான். சில சேம்பிள்ஸ் இதோ...



# இப்படித்தான் இருக்க வேணும் நாடு

### அமையுமா நாடு?

**கு**றைகள் இல்லாத குறிஞ்சியோடு, மூடத்தனம் அற்ற முல்லையோடு, மதுக்கடைகள் மூடிய மருதத்தோடு, 'இலவசம்' இல்லா இனிய நெய்தலோடு, பரவசம் பொழியும் பாலையோடு...

- பா.விக்னேஷ்







கல்கி விசிட்!



# மாமனாரை.. மாமியாரை.. வாரி அணைச்சிக்கோ...

'தாலி கட்டின புருஷனை நீ புரிஞ்சு நடந்துக்கோ
மாமனாரை மாமியாரை வாரி அணைச்சிக்கோ
உன் நாத்தனாரை மச்சினமாரைப் பாத்துப் பழகிக்கோ - நீ
குடும்பத்துக் குலவிளக்கு தெரிஞ்சு நடந்துக்கோ''

- 'கானா' சந்தோஷ் குமார், மூன்றாம் ஆண்டு பி.எஸ்ஸி



அவனுக்கு என்னப்பா! யோகக் காரன்னு இப்படியும் பேர் வாங்கலாம்.






# கல்லூரிக்குள் மொபைல் தேவையா? இல்லையா?

## ஒரு சில வைர வரிகள்

**ராமசந்திரன் :** வரையறுக்கப்பட்ட எல்லையைத் தீர்மானித்துவிட்டுப் பயன்படுத்தலாம். வகுப்பு சுவாரஸ்யமா இருந்தா cell phone-க்கு அவசியமிருக் காது.

**லட்சுமி:** அவசியமான ஒரு விஞ்ஞானப் படைப்பை அர்த்தமற்ற பயத்தில் கட்டுப்படுத்துவதும் மூட நம்பிக்கைதான்.

**கயல்விழி:** கெட்டுப் போற ஜென்மங்கள் செல்ஃபோனால்தான் கெடும் என்றில்லை.

**விக்னேஷ்:** செருப்பு அவசியம்தான். அது கோயில் வாசல் வரைதான் அனுமதி. புக்ஸ் முக்கியம்... அதுக்காக அதை எக்ஸாமுக்கு எடுத்துப் போக லாமா?

**பாக்யலட்சுமி:** தொடர்புகொள்ளும் தொலைபேசி கல்லூரி அறைகளில் கல்விக்குத் தொல்லைபேசியாக மாறி விடும் என்பதே சாதாரண நிஜம்.

**குமரகுரு:** கல்லூரிப் பாடம் நடக் கையில் SMS-ல் காதல் பாடம் நடக் காமல் இருக்கணும்னா cell phone தேவையில்லைதான்.



**நா**ங்க செலக்ட் பண்ண, இருக் கிறதிலேயே பெஸ்ட் (எங்களை மாதிரி) ஜோக்ஸைத்தான் இப்ப நீங்க கல்கியில் படிக்கிறீங்க!



# "சைப்" நாங்க World-2

"நாமும் வளரணும்;
நாடும் வளரணும்
அதுதான்டா வளர்ச்சி!
நமக்கு ஆசையோடு சொல்லித்தந்த குருவுக்கு அதுதானே மகிழ்ச்சி-ன்னு படிப்பு மட்டுமில்ல, ஜெர்மனியில் நடந்த மாணவர்களின் தொழில் முனைவுத் தன்மையை ஊக்குவிக்கும் 'சைஃப்' (ஸ்டூடன்ட்ஸ் இன் ஃப்ரீ எண்டர்பிரைஸ்) உலக கோப்பை போட்டியிலும் நாங்க இரண்டாவது இடம்'' என்கின்றனர் ஆல்ஃபா மாணவர்கள்.

சுயதொழிலுக்கு மக்களைத் தயார் செய்து முன்னூறு கிராமவாசிகள் 35 லட்சம் வருமானம் ஈட்ட வகை செய்துள்ளனர். 41 நாடுகள் கலந்துகொண்ட போட்டியில் ஆல்ஃபா ஸ்டூடண்ட்டுகள் World No.2. (அட இந்தியாவுக்கே இது பெருமை தானே!)

## Mr.பிரபலம்

"கலை செத்த ஊரில காலந் தள்ள முடியாதுங்கிறது காலேஜுக்கும் பொருந்தும். எல்லா கலை நிகழ்ச்சியிலும் கலந்துக்கிட்டு ஜெயிப்பான். எவ்வளவு ஜெயிச்சாலும் ஒரு துளி கர்வமும் இல்லாம டீச்சர்ஸிடம் மதிப்பா நடந்துக்கும் சுரேஷ் கார்த்திக்குக் கொடுக்கலாம் ஸார் Mr. பிரபலம் பட்டம்''

- தமிழரசி கோதைமார்பன்
(ஒருங்கிணைப்பாளர்)





என்னை நானே வரையறது
ஒண்ணும் கஷ்டமில்லப்பா!

- நிஷா

# எங்க காலேஜ்!



* கிரேஸ் ஜார்ஜ்



* சுஜா ஜார்ஜ்



* லீலா ஆபிரகாம்

"பள்ளியில் தொடங்கிய எங்கள் கல்விச் சேவைப் பயணம் கல்லூரி வரை வளர்ந்துள்ளது. எங்கள் குழுமத்தில் ஆல்ஃபா பொறியியல் கல்லூரி, ஆல்ஃபா காலேஜ் ஆஃப் மேனேஜ்மென்ட், ஆல்ஃபா சயன்ஸ் அண்ட் ஆர்ட்ஸ் என்ற தொடர் சேவை நீள்கிறது. அதுமட்டுமின்றி எங்கள் ஆல்ஃபா குழும தலைவர் டாக்டர் கிரேஸ் ஜார்ஜ், உலகத் தரத்தில் பன்னாட்டு மாணவர்கள் பயிலும் இன்டர்நேஷனல் ஸ்கூலும் துவக்க இருக்கிறார்.

எங்கள் கல்விக் குழுமத்தின் நிர்வாக இயக்குனர் சுஜா ஜார்ஜ் இந்தக் காலத்துக்கு ஏற்ற மாதிரி 10 யுஜி பாடத் திட்டங்களையும் 4 பிஜி பாடத் திட்டங்களையும் ஆல்ஃபா கல்லூரியில் செயல்படுத்தியுள்ளார். 1300 மாணவ மாணவிகள் பயிலும் சுயநிதிக் கல்லூரியான இதில் N.S.S. மற்றும் N.C.C-யின் சேவை மகத்தானது.

மாணவர்களின் ஒளிமயமான பிராக்டிகலான லைஃபைக் கவனத்தில் கொண்டு ஆங்கில மொழிப் பயிற்சியும் பர்ஸனாலிட்டி டெவலப்மெண்ட் கோர்ஸுடன் சுய வேலைவாய்ப்புப் பயிற்சியும் இங்குண்டு.

கல்லூரியிலிருந்து Envision, Quest, சுவடுகள், Bio Spart, Bits n Bytes போன்ற ஒவ்வொரு துறை மாணவர்களுக்கான இதழ்களும் வெளிவருகின்றன. தேர்ந்த சிற்பி போல ஏறத்தாழ 60 ஆசிரியர்கள் இங்கு இந்திய விடியல்களைச் செதுக்குகிறார்கள்'' என்கிறார் கல்லூரி முதல்வர் முனைவர் லீலா ஆபிரகாம்.

**செய்தி : ஆர்.பாலா**
**படங்கள் : அமிர்தா**

*கவிதையின் பெருமை பொய்கள்*
*காதலின் பெருமை விட்டுக்*
*கொடுத்தல்*
*விடியலின் பெருமை வெளிச்சம்.*
**- து.பவானி**

*வீரதப் படையலாய் நீ மாறடி*
*கூரை சோறு கொத்தித் தின்னும்*
*காகமாய் நான் மாற...*
**- கா.இராமச்சந்திரன்**



இவர் மாதிரி இங்க நிறைய பாடகிகள்



விலை ரூ.55/-
கூரியரில் பெற ரூ.15/-
சேர்த்து அனுப்பவும்
(DD/MO மட்டும்)




**படிக்க...**

**பாதுகாக்க...**

**பரிசளிக்க...**

கல்கியில்
வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன்
ஸ்வாமிகள்
எழுதிய

# 'கண்ணனைத் தேடி...'

## புத்தகமாகத் தயாராகிவிட்டது

முன் பதிவு மற்றும் விவரங்களுக்கு :
ஜெயா ஸ்ரீனிவாசன், 'சந்தா பிரிவு',
பரதன் பப்ளிகேஷன்ஸ், கல்கி பில்டிங்ஸ், 47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32. தொலைபேசி : 044 - 4343 8888



★ எம்.அசோக்ராஜா, திருச்சி

**கண்ணாடியைப் பார்க்கும்போது உங்களுக்கு என்ன தோன்றும்?**

கண்ணாடியில் என் பிம்பம் தோன்றும்!

★ அ.கு.கிருஷ்ணன், புதுச்சேரி

**அரச மரத்தின் கீழ் பிள்ளையார் அமர்ந்திருப்பது ஏன்?**

மேலே உட்கார்ந்தால் அனுமார் ஆகி விடுவாரே!

★ அ.ஷண்முகசுந்தரம், பெங்களூர்

**ஒரு குடும்பமே கிரேஸியானால்?**

கூட்டுக் குடும்பமாகக் கொழிக்கும்.

★ டி.கே.தேவனாதன்,

குரோம்பேட்டை

**தங்களின் இந்த உயர்வுக்குக் காரண மானவர்கள் யார்?**

கிரேஸி பிடித்து இழுக்காமல் இருந்த குடும்பத்தினர்!

★ கொணவட்டம் ஆர்.தேவேந்திரன்,

வேலூர்

**பாவ புண்ணியங்களுக்குப் பலன் உண்டா... இல்லையா?**

பாவத்துக்குப் பலன் உண்டு. புண்ணியத்துக்குப் பாவத்தைப் போக்கும் பலம் உண்டு!

★ கே.ஆர்.ரவீந்திரன், சென்னை

**ஒபாமாவுக்கு மகாத்மாவுடன் விருந்துண்ண ஆசை... கிரேஸிக்கு?**

மகாத்மாவுடன் சத்தியாகிரக 'உப்பு'மா

உன்னை ஆசை!

★ ரகுராமன், சென்னை

**பொறுமையாக வாரா வாரம் கேள்விகள் கேட்கும் நாங்கள் தெய்வத்துக்குச் சமமானவர்கள்தானே?**

ஆமாம் சாமி. கேள்வி கேட்கும் நீங்கள் என் பதிலுக்குப் பிள்ளையார் சுழி போடும் 'வினா'யகர்கள்!

★ சி.பூங்கோதை, சென்னை

**ஐப்'பசி'க்கு 'அடை' என்றால்... ஏனைய மாதங்களில்?**

அடைக்குத் தொட்டுக் கொள்ள சட்னி மாதிரி சொட்(டு)நீ(ர்)!

★ ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி

**கர்ண கொடூரம் என்று சொல்கிறோமே? கர்ணனுக்கும் கொடூரத்துக்கும் என்ன சம்பந்தம்?**

விடுங்க கர்ணன் ஸாரி கண்ணன்! ஏதோ கர்ண பரம்பரையா சொல்லிக்கிட்டு இருக்காங்க... நீங்க இதையெல்லாம் கர்ணத்துல (சமஸ்கிருதத்துல காது) போட்டுக்காதீங்க!

★ என்.காளிதாஸ், சிதம்பரம்

**உங்களைத் தூக்கத்திலிருந்து எழுப்புவது யார்?**

என்னைக் கேட்டால்...? என்னைக் கேட்காமல் தூங்கியவனைக் கேளுங்கள்!

★ மு.மதிவாணன், அரூர்

**மயிரிழையில் ஆபத்திலிருந்து தப்பியது உண்டா?**

எனக்கு மயிரிழை ஆபத்து கிடையாது. நான் முன்னெச்சரிக்கையான self shaving ஆசாமி.

★ சரா.ஏ.முரளி, கள்ளக்குறிச்சி

**உங்களுடைய முதல் சம்பளம் எவ்வளவு என்று கூற முடியுமா?**

சில்லறையாக மாற்றினால், கை நிறைய காசு!

# கேள் 'வினா' யகர்கள்!



★ முனைவர் கிருஷ்ணன், டாகூர் ஆர்ட்ஸ் காலேஜ்

**உங்களுக்குள் இருக்கும் அந்த ஒருவன் யார்?**

உங்களுக்குள் இருக்கும் அதே ஒருவன்தான். அவன் உங்களுக்குள் இருக்கும்போது கேள்வி கேட்பான். என்னுள் இருக்கையில் பதில் சொல்வான்.

★ என்.பாலகிருஷ்ணன், மதுரை

**'Right'க்கு எதிர்ப்பதம் 'left'ஆ... 'wrong'ஆ?**

தமிழ் 'ரைட்'டை திருப்பிப் போட்டா 'ட்ரை' (try)... 'மரா...மரா' ஜபம் 'ராம ராம' ஆவதுபோல விடாமல் ட்ரை பண்ணால் வெற்றிகரமான 'ரைட்'டாகும். வீதியில் keep left... வாழ்க்கையில் keep right...! ✪

ஒரு டிராவல்ஸ் நிறுவனத்தில் ஓட்டுனராக இருக்கும் வெங்கடேஷ் 'கேளுங்க... கேளுங்க... கேட்டுக்கிட்டே இருங்க' கோஷ்டி. காலையில் பார்ட்டி வண்டியில் ஏறியவுடனேயே, 'ஸார்... ரேடியோ போடலாமா?' என்று அனுமதி கேட்டு, ஏதோ ஒரு எஃப்.எம்.மிலிருந்து ஒலிபரப்பாகும் கந்தசஷ்டி கவசத்தைப் போட்டு விடுகிறார். காலையில் இப்

**பொருளாதார உருக்கம் காரணமாக பிரபலமான தொகுப்பாளர்களுக்கு சம்பளம் கொடுக்க முடியாமல் சேனல்கள் அவர்களுக்கு டாட்டா சொல்லிவிட்டன!**



# பண்பலை

படித் தொடங்கும் இவரது நேரம் ட்யூட்டி முடியும் வரை எஃப்.எம். சேனல்களோடு தொடர்கிறது. ''இந்த எஃப்.எம்மைக் கண்டுபிடித்தவனுக்குக் கோடி வணக்கங்கள். இவை இல்லாவிட்டால் நாங்கள் மண்டை காய்ந்து போய் விடுவோம். நான் மட்டுமல்ல; என்னைப் போல் நூற்றுக் கணக்கான ஓட்டுனர்களுக்குப் பொழுது புலர்வதும், பொழுது சாய்வதும் எஃப்.எம். மோடுதான்'' என்கிறார். ஓட்டுனர்கள் மட்டுமல்ல; டெய்லர்கள், முடிதிருத்துபவர்கள், டீக் கடைக்காரர்கள், வீடு மற்றும் அலுவலகக் காவலர்கள் என்று உழைக்கும் வர்கத்தை மட்டுமல்லாமல், தகவல் தொழில்நுட்ப ஒயிட் காலர்காரர்கள் வரை பலரையும் கட்டிப்போட்டு விடுகின்றன எஃப்.எம். சேனல்கள்.




நாடு முழுக்க நூறு தனியார் எஃப்.எம். சேனல்கள் இருக்கின்றன. தமிழகத்தில் மட்டும் எட்டு. தவிர அரசாங்கத்தின் மூன்று எஃப்.எம். சேனல்கள். இவற்றுள் சென்னையில் உள்ள சென்னை லைவ் என்ற சேனல் மட்டும் ஆங்கில மீடியம்! சென்னை நகர் மற்றும் சுற்றுவட்டாரத்தில் மட்டும் சுமார் பத்து லட்சம் நேயர்கள் எஃப்.எம். சேனல்களுக்கு காதைக் கொடுக்கிறார்கள். இவை தவிர பல்கலைக் கழ

கங்கள், கல்லூரிகள் சமுதாய வானொலி சேனல்களை நடத்து கின்றன.

முதன் முதலாக வந்தது சூரியன் எஃப்.எம். மே 2003ல் தொடங் கப்பட்ட இந்த சேனல் அசைக்கமுடியாத இடத்தை இன்றளவும் பெற்றிருக்கிறது. பின்னால் தொடர்ந்த ரேடியோ மிர்ச்சி, முதலில் கொஞ்சம் தடுமாறித்தான் போனது. ஆனால் சுச்சி போன்ற தொகுப் பாளர்கள் மிர்ச்சியின் பலத்தைக் கூட்டினார் கள். இன்று சென்னை நகரத்தில் மிர்ச்சியும் சூரியனும் சமபலத்தைப் பெற்றுள்ளன. பின்னர் வந்த தனியார் எஃப்.எம்.கள் பெரிய எதிர்பார்ப்போடு தொடங்கப்பட் டாலும், தங்களைத் தக்கவைத்துக்கொள்ள போராடிக் கொண்டுதானிருக்கின்றன. எஃப்.எம்.களில் தொகுப்பாளர்கள் திறமை யால் கிடைக்கும் செல்வாக்கு சேனலின் செல்வாக்கைத் தூக்கி விடுகிறது. சுச்சி, ஆனந்தக்கண்ணன், தினா, கோபிநாத் ஆகியோருக்குத் தனிப்பட்ட முறை யில் நிறைய ரசிகர்கள்.

# பாலிடிக்ஸ்!

பொருளாதார உருக்கம் இந்த சேனல்களையும் விட்டு வைக்கவில்லை. இந்த படா தொகுப்பாளர்களுக்குத் தகுதியான ஊதியம் கொடுக்க முடியாமல் பல சேனல்கள் அவர் களுக்கு டாடா சொல்லிவிட்டன. இந்த சேனல்களை நடத்துவோர் பெரிய மீடியா நிறுவனங்கள் மற்றும் கார்ப்பரேட் குழுமங்கள். ஆனால், வேலை செய்பவர்களுக்குக் கணிசமான சம்பளம் இல்லை. காரணம் இந்த சேனல்கள் நம்பி யிருப்பது விளம்பர வருமானத்தைத் தான்.

''எஃப்.எம்.களுக்கு காலை ஏழு மணி முதல் பத்து மணி வரை மற்றும் மாலை ஐந்து மணி முதல் ஏழு மணி வரை தான் பிரைம் டைம். இந்த நேரத்தில்தான் விளம்பரம் கொடுக்க எங்கள் வாடிக்கை யாளர்கள் விரும்புகிறார்கள்'' என்கிறார் விளம்பர ஏஜென்ஸி நடத்தும் ரமேஷ். ''தொலைக்காட்சி நிகழ்ச்சிகளுக்குத் தனியார் அமைப்பு மதிப்பீடு (TRP) கொடுத்து விடுகிறது. அந்த அடிப்படை யில் விளம்பரம் கொடுக்க முடியும். ஆனால் இந்த எஃப்.எம். சேனல்களின் நிகழ்ச்சிகளின் வீச்சைக் கண்டறிவதற்கு இன்னமும் ஒரு சரியான அமைப்பு இல்லை. காலையில் ஒலிபரப்பப்படும் ப்ரேக்ஃபாஸ்ட் நிகழ்ச்சிகளை மக்கள் விரும்பிக் கேட்கிறார்கள். சுச்சி, கோபி நாத் போன்றோர் இவை மூலம் பாப்பு லரானார்கள். ஹலோவில் உலா வரும் காஃபி வித் கௌசி யும் பிரசித்தம். சூரி யனில் பிளேடு நம்பர் ஒன், கிட்டு மாமா - சுசி மாமி போன்ற நிகழ்ச்சிகளுக்கு நேயர்கள் அதிகம்'' என்கிறார் ரமேஷ்.

''எஃப்.எம். சேனல் களில் வார நாட்களில்தான் விளம்பரம் கொடுக்க விரும்புகிறார்கள். சனி, ஞாயிறுகளில் நேயர்களைத் தொலைக்காட்சிகள் கட்டிப்




* கோபிநாத்

போட்டு விடும்'' என்கிறார் மற்றொரு விளம்பர நிறுவன உரிமையாளரான நளினி.

எஃப்.எம். சேனல்களின் தாரக மந்திரமே பொழுதுபோக்குதான். இதில் ஸீரியஸான விஷயங்களுக்கு இடம் இல்லை. அதனால்தானோ என்னவோ அரசு இந்த சேனல்களில் செய்தி மற்றும் நடப்பு விவகாரங்களைப் பற்றிச் சொல்ல அனுமதி கொடுக்கவில்லை. பேட்டைக்குப் பேட்டை வர இருக்கும் இந்த சேனல்களில் செய்திகள் ஒலிபரப்ப அனுமதி கொடுத்தால், இன, மத மோதல்கள் போன்ற பிரச்னைக்குரிய நேரங்களில் இவற்றின் ஒலிபரப்பு சமுதாயத்தில் அமைதியின்மையை உண்டாக்கும் என்று அரசு தயங்குகிறது. இருந்தாலும் ஆல் இந்தியா ரேடியோ, பி.டி.ஐ., யு.என்.ஐ. கொடுக்கும் செய்திகளை மட்டும் ஒலிபரப்ப வேண்டும் என்ற நிபந்தனையோடு கூடிய அனுமதி விரைவில் கொடுக்கப்படலாம் என்கிறார்கள்.

* கவிதா

* ஆனந்தக் கண்ணன்

# தொகுப்பாளர்கள் தமிழைக் கொலை செய்யக்கூடாது!

''அதனாலென்ன, அரசியல் உட்பட நடப்பு நிகழ்ச்சிகளை அன்றாடம் மறைமுகமாக ஒரு கதை போல நேயர்களுக்குச் சொல்லி வருகிறோம். எங்களைப் போன்ற தொகுப்பாளர்களின் வேலை மிகவும் கடினமானது. இரண்டு பாடல்களுக்கு இடையில் உள்ள நாற்பது வினாடிகளை உற்சாகமாக்க வேண்டும். எதிரே பேசுபவர் போரடித்தால் நாகரிகமாக கட் பண்ண வேண்டும். எனவே எங்கள் பார்வை 360 டிகிரி இருந்தால்தான் பேச விஷயம் கிடைக்கும். கையில் இருக்கும் சரக்கைக் கொஞ்சம் மெருகேற்ற வேண்டும்'' என்கிறார் நெல்லை ஹலோ எஃப்.எம்.மில் தொகுப்பாளராக இருக்கும் தமயந்தி.

கார் ஓட்டுபவர்களுக்கு வசதியாக எங்கெங்கு டிராபிக் ஜாம் என்று ஒலிபரப்புகிறது ஒரு சேனல். காவல் துறையே இதற்காக எஃப்.எம்.மோடு கை கோத்துள்ளது. மற்றொரு சேனல் கிரிக்கெட் செய்திகளுக்கு முன்னுரிமை கொடுக்கிறது.

''ஜாலியோ ஜாலியான சேனல்கள்தாம் பண்பலை சேனல்கள். இவற்றில் பரபரப்புக்கும் சர்ச்சைகளுக்கும் இடமில்லை. ஆனால், இந்தத் தொகுப்பாளர்கள் தமிழைக் கொலை செய்யக்கூடாது' என்கிறார் மமதி சாரி. பிக்.எஃப்.எம்மில் இருந்து இவர் சன் தொலைக்காட்சிக்கு ப்ரமோட் ஆகிவிட்டார். சேனலுக்கு சேனல் பாப்புலர் தொகுப்பாளர்களைத் தங்கள்



98.3 FM RADIO MIRCHI It's Hot!

பக்கம் இழுக்க அவ்வப் போது கயிற்றை வீசுகின்றன. தொகுப்பாளர் மட்டுமல் லாமல், நிகழ்ச்சிகளுக்குப் பின்னால் ஒரு கிரியேடிவ் டீம் வேலை செய்கிறது.

சூரியன் மற்றும் ஹலோ எஃப்.எம். சேனல்களுக்கு கிராமப்புற நேயர்கள் அதிகம். அரசின் கோடை எஃப்.எம். தென் மாவட்டங்களில் ஹிட்.

இந்தியாவில் 29 பெரிய நகரங்களில் பண்பலை தனியார் சேனல்கள் இருக்கின் றன. அலைக்கற்றை பெற வேண்டு மானால் அரசுக்கு முதலில் நுழைவுக் கட்டணமாக சில கோடிகள் அழ வேண்டும். தவிர வருடா வருடம் அந்த நுழைவுக் கட்டணத்தில் பத்து சதவிகிதம் உரிமக் கட்டணமாகச் செலுத்த வேண்டும். இந்த வகையில் மத்திய அரசுக்கு பத்து கோடி வருட வருமானம் வருகிறது. ஆனால், இதைக் கூடக் கட்ட முடியாமல் வடக்கே சில சேனல்கள் தவிக் கின்றன.

இப்படிப்பட்ட சூழல்களுக்கு மத்தி யிலும் எதிர்காலத்தில் சேனல்கள் எண்ணிக்கை பெருகுவதற்குத் தான் வாய்ப்பிருக்கிறது. இப்போதெல்லாம் அச்சு மீடியா தேர்தலின்போது பணம் வாங்கிக் கொண்டு வேட்பாளர்களைப் பற்றிப் பிரமாதமாக 'விளம்பரம்' என்ற போர்வையில் வெளியிடுகின்றன. எதிர் காலத்தில் குறிப்பிட்ட தொகுதியில் போட்டியிடும் வேட்பாளர்கள் இதே போன்று எஃப்.எம். சேனல்களைப் பயன் படுத்தும் வாய்ப்பும் உண்டு. விஞ்ஞான முன்னேற்றத்தில் சில கேடுகளைத் தவிர்க்க முடியாது.

– கௌசி


நெட்ஷ்ட்
என்னை லவ் பண்ணலைன்னா சுட்டுடுவேன்.
இதுக்கு, சாகிறது எவ்ளோ... மேல்! சுட்டுடு!

Registered with the Registrar of Newspaper of India under No. 10410/57 " Registered No. TN / CC (S) DN / 144 / 09 - 11 " License
post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11" Registered as a Newspaper in SriLanka